

திருநெல்வேலி, ஸ்ரீ நெல்லையப்பர் கோவில் சந்நிதி.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது


சிலம்பு ௨ } மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ மார்கழித் திங்கள் 1924௵ டிசம்பர்௴—1925௵ ஜனவரி { பரல் ௧௨


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## நமது செல்வி

நமது 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் வெளியீடு எல்லாம் வல்ல இறைவனருளால் இத்திங்களோடு இரண்டாவது ஆண்டு நிரம்பப் பெறுகின்றாள். இவள் ஆண்டு முதிர்ச்சிக் கேற்ப அறிவானும், உடம்பானும் பெருகி மிளிர்ந் தொளிர்கின்றனளாகலின் இதுபோல் மூன்றாவது ஆண்டினும் இவள் இருவகையானும் வளர்ச்சியுறுவாள் என்பதற் கையமின்று.

நமது 'செல்வி' இவ்வாண்டில் தமிழ்ப்புலவர் வரலாற்றாராய்ச்சி, திருஞான சம்பந்தர் தேவார வாராய்ச்சி, இலக்கண விளக்க நூலுரையாசிரியரைப்பற்றிய வாராய்ச்சி, தமிழ்மொழியாராய்ச்சி, சைவ சித்தாந்த வாராய்ச்சி, திருவள்ளுவர் திருக்குறளாராய்ச்சி, காழித்தேவார வாராய்ச்சி முதலியனவும், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிற் றிருவுருவப்படங்களும், சீகாழிக்கோயிற் றிருவுருவப்படங்களுங் கொண்டு செந்தமிழ் நாட்டில் யாவராலும் போற்றப் பெற்றமை யறிந்ததே.

இவள் ஆண்டு முதிர்ச்சிக் கேற்க இவளுக்குக் கல்விப் பொருள் அளித்துதவிய அறிஞர் பலர்க்கும் எங்கள் உளமுவந்த நன்றி உரிமையாகின்றது.

தமிழ் நாட்டில் பத்திரிகையால் ஊதிய மடைவதரிது என்ற உண்மைக் கருத்தை உள்ளவாறறிந்து கைம்மாறு கருதாது கல்விப்பொருள் அளித்தும், அளிக்க விரும்பியுமிருக்கிற அன்பர் பலர்க்கும் யாது கைம்மாறு செய்யவல்லேம். அரும் பெருஞ் செல்வரா மண்ணலார், அவர்களுக்கும் அவர்களாதரித்து வரும் இச்செல்விக்கும் நீடு வாழ்வும், பல்வளமு மளித்துய்த்துப் போற்றுவாராக!

நமது செல்வியினை முன் இரண்டாண்டினும் வாங்கிக் கற்று இன்ப வெள்ளத்தாழ்ந்த அன்பர்கள் 'நான் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்' என்றபடி தாம் பெற்றதோடமையாது தமது நண்பர்களையுந் தூண்டி இதற்குக் கையொப்ப நண்பராக்கிப் பருகச்செய்தமை பெரிதும் பாராட்டற்பாலது. இதுபோன்ற வுதவியினை இவளது மூன்றாவதாண்டிலும் செய்து தருமாறு அன்புடன் வேண்டிக் கொள்ளுகின்றோம்.

இங்ஙனம்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

---

# திரிபுணர்ச்சி

ஒவ்வொரு பொருளின் உண்மையையும் நடுநிலைநின்றாராய்வார் ஐயம், திரிபு என்னும் இடர்ப்பாடுகளை விலக்க முயலுதல் வேண்டும். ஐயமுணர்ச்சியினும் திரிபுணர்ச்சி மிக்க கேடு பயக்கும். என்னை? ஐயப்பாடுடையவன் அதைத் தீர்த்துக் கொள்ள முயலுவன்; திரிபுணர்ச்சி யுடையவன் தனது மெய்யறிவின்மையை எளிதாக உணர்ந்து கொள்ளான். ஆதலின் தனது தவறுமிக்க கருத்துக்களை உண்மையென்று உலகத்தார்க்குப் போதித்துப் பெருங்கேடு விளைத்தல் கூடும். அங்ஙனம் நமது "செந்தமிழ்ச் செல்வி" யைப்பற்றித் திரிபுணர்ச்சியுடைய பத்திராதிபர் ஒருவர் தமது திரிபுணர்ச்சியை "சைவம்" என்னும் பத்திரிகையில் வெளியிடுவாராயினர். அவரது இகழ்ச்சியுரைகள் செல்வியின் நலன் உணரும் அறிவாளர்க்கு நகையாடற்கேயேதுவா மெனினும் அவர் போலியுரை கேட்டு செல்வியினுண்மை யறியாதோர் அவரது போலியுரைகளால் கலங்காவண்ணம் சில மொழிகள் ஈண்டு வரைதலின்றியமையாததாயிருக்கின்றது. செல்விக்குப் பெருமை கூறிய அன்பர்பால் பொறாமை காரணமாகத் தொடுத்த வெற்றுரைகள் யாவற்றையும் ஆராயப்புகின் மணற்சோற்றிற் கல்லாய்தல் போலப் பயனிலதாமாதலின் அதனை விடுத்து, அவரது கருத்துக்கள் சிலவற்றையே இவண் ஆராயக் கருதுகின்றோம்.

தமிழின் மேம்பாட்டையும் சைவத்தின் சிறப்பையும் நன்கு விளக்கும் தங் கடமையை இச்செல்வி செய்யக்கண்டு தாம் அவ்வாறு செய்ய இயலாமையான் வந்த அழுக்காறு காரணமாகச் 'செல்வி தற்பெருமை கூறுகின்றாள்' என்று குழறுவது தமிழ்மகனாய்ப்பிறந்து சைவம் போதிக்க எழுந்தவர் அறிவுக்கு அழகாகுமா? ஆரிய சகோதரியை வலிந்து இழுத்துப் போர் புரிதல் செல்வியின் நோக்கமன்று. அவ்வாறு கூறுகின்றவர் தனது கூற்றை நன்றாக நிறுவற்பாலர். அங்ஙனம் நிறுவாது வெற்றுரை கூறி மகிழ்வதால் பயனென்? ஆரிய மூல நூலையாதல் தமிழ்ப்

பண்டை நூலையாதல் நன்கு ஆயும் முயற்சி சிறிதும் இல்லாத ஒருவர் ஆரியம் ஈது, தமிழ் ஈது என்று நுணுகியறியும் ஆற்றலிலராய்த் தமது வாயில் வந்தவாறு பிதற்றித் தமது தாய்மொழிப் பற்றின்மையை நாணமின்றி வெளியிடுவதாற் பயனென்?

தமது தாய்மொழியைப்பற்றித் தாம் போற்றுதற்குரிய பெரியார் கூறும் நன்மொழியையும் குறிப்பா லிகழுமிவரது தன்மையை என்னென் றுரைப்பது? தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்தல் முதலிய பெருமைகள் தமிழ்மக்கள் ஒவ்வொருவருக்கும் பெருமகிழ்ச்சி தரும்பான்மையன. அவற்றைக் கேட்டுத் துயருறுமொருவர் தமிழப் பயிர்க்குக் களை போல்வராதலின் அவர் உரைகளைப் பொருட்படுத்துதல் தக்கார்க்கு ஏலாததொன்று.

பத்திரிகையை முன்னொடு பின் மலைவற வுணருமாற்றலிலாத இவர் ஒருபாற் சார்புபற்றிச் சம்பந்தப்பெருமானை இழித்துரைப்பதாக அதனை இகழ்கின்றார். இவர் சிவஞான சித்தியார் பரபக்கத்தில் மதத்தினை முதற் கூறிப் பின் மதமறுதலை கூறும் முறைவைப்பினை சிறிதும் உணராதவரேயாவர். சைவசித்தாந்த நூலுட்சிறந்த சிவஞான சித்தியாரின் முற்பகுதியையே கற்றுத் தேறாத இவர் சைவசித்தாந்தத்தையும், சம்பந்தப் பெருமானையும் பற்றிப் பேசுவதற்கு எவ்வாறு உரிமையுடையர்? தமது மனவெரிச்சலையும், தமது மிஞ்சிய சீற்றத்தையும் வறிதே இங்ஙனம் வெளிப்படுத்தியதால் பயன் யாதோ? தமிழ்த்தாய் செய்த நன்றி கொன்ற இம்மகற்கு அத்தாயினை எளியவளென்றும், இழியவளென்றும் இழித்துப் பேசுதலியல்பே. அவ்விழிபுரைகள் அறிவுடையாரால் எள்ளி ஒதுக்கற்பாலன. தமிழ் கற்றற்குப் பயன் நன்றாக வயிறு வளர்த்தல் என்ற கருத்தைக் கடைப்பிடித்து ஒழுகும் புல்லறிவாளர் கொள்கையே இவர்க்குத் தலைசிறந்த கொள்கை. வயிறு வளர்க்கவேண்டுமென்ற ஒரே கொள்கையுடையார் அறிவுவளர்க்கும் தமிழைக் கைவிட்டு மயல் வளர்க்குந் தையல்பால் தூது செல்லுதலைச் சிறந்ததெனை மேற்

கொள்வர். அம்மேற்கோளைப் போற்றிப் பாராட்டும் இவரது அறிவு இருந்தவாறென்னே! தாயைப் பழித்துப் பிள்ளை, விபசாரி யாவதையும் தக்கதென்று கூறுமியல்பு இவர் சொற்களில் விளங்குகின்றது. தாயின் தளர்ச்சி நிலையைக் கண்டு துக்கமுறுதல் இயல்பு; வெட்க முறுவதெதனாலோ? இவர்போல்வார் சிலர் இன்னுந் தலைப்படுவார்களானால் தமிழ்த் தாய் மிகவும் நலிதல் ஒருதலை. பிறனொருவனுக்கு ஊழியஞ் செய்து பெற்ற ஊதியச் செருக்கால் தோற்றப் பொலிவு மிக்க தனது நண்பரிடத்தில் தனது தந்தை தனக்குக் குற்றேவல் செய்யும் கிழவனாவான் என்ற நன்றியில் கூற்று மொழிந்த ஓராண்மகன் போலத் தன் முயற்சியினால் சொற்பொருளீட்டி முன்வருந் திறமையில்லாது ஆரியர் பின் சென்று அவர் காலாற் படைத்த வற்றைத் தலையாற் செய்து, அவர் பிரசாதத்தை ஊதியமாகப் பெற்றுச் செருக்கித் திரியும் இவர் ஆன்று அடங்கி வளமிகுந்து என்றுமழியாது நின்று நிலவும் தமது தாய்மொழியைக் குற்றேவற் சிறுமகளெனப் புறக்கணித்தலால் அவளது இயற்கை மேம்பாட்டிற்கு யாதொரு குறைவும் நேருதற் கிடமில்லை. ஓரிடத்திலும் பேச்சு வழக்கில்லாத ஒரு மொழியினை இவர் உலக மெங்கும் சிறப்புப் பெறும் பான்மையதென்று கூறுவது ஒரு சிறிதும் பொருந்தாது. ஆரிய மொழிப் புலவர்கள் தமது தாயின் சிறப்பைச் சீராட்டிப் பாராட்டிச் செல்லுமிடமெல்லாம் புகழ்ந்துரைப்பதாலே அவளைப் பலரும் உணர்ந்தனர். பலரும் ஒன்றினை யுணர்வதால் அதற்குச் சிறப்பும், அதனையும் உணராமையால் இழிவும் இயற்கையாக அதற்கு உண்டென்று கொள்ளின் யாரும் எளிதாக அறியாத பரம்பொருள் எவற்றினும் இழிந்த பொருளாகக் கொள்ளப்படல் வேண்டும்.

இனி, இங்ஙனம் பலர் அறிந்ததால் சிறப்பும், பலர் அறியாமையால் இழிபுங் கூற முன்வந்த இச்சைவர் தமது சைவ சமயம் சிறந்ததென்று எங்ஙனம் நிலைநிறுத்தல் கூடும்? சைவ சித்தாந்தத்தையுணர்ந்த மக்கள் வாழும் நிலம் உலகத்தில் மிக மிகச் சிறியபாகம். கிறித்து மதமும், புத்தமதமும், மகமதிய மதமும் வளரும் நிலம் தமிழ்நாட்டினும் மிகமிகப் பெரிதாகிய

நாடுகள். தமிழ்நாட்டிலுங்கூட கிறித்து மதத்திற்கும், மகமதிய மதத்திற்கு மிருக்கிற செல்வாக்குகள் சைவ சமயத்திற்கில்லை. அரசாங்கத்தார் சமயம் கிறித்து சமயம். குடிகளிற் சிலர் சமயம் சைவசமயம். அரசாங்கத்தார் மரியாதை பெறுதற் குரியர். குடிகள் மரியாதை செய்தற் குரியர். திரிபுணர்ச்சி வயத்தால் தோன்றியவாறு குழறுமிவர் இக்காரணங்களால் சைவசமயத் தைக் கைவிட்டு அன்னிய சமயத்திற்குச் செல்ல ஒறுப்படுவர் போலும். சைவசமயம் வளர்ப்பதற்குச் சைவசமயிகள் பலர்வைத் தும், சைவம் சித்தாந்தம் முதலியபல பத்திரிகைகள் அமைத்தும், பன்முயற்சிகள் செய்தும், அவைகள் பலவும் தழைத்தோங்காமல் இருந்த இடந் தெரியாது மங்கி நிற்கின்றன. இவரது கொள் கைப்படி இக்காரணத்தாலும் பிறசமயத்துக்குப் போக ஒறுப் படுவர் போலும்.

இனி, பல்வகையணிகளும் தரித்த பெண்மணிபோலப் பல் வகை சொற் பொருள் வளங்களும் ஒருங்கு நிறைந்துள்ளது நமது செந்தமிழ்ச் செல்வி என்பதை அறியாது பொருத்தமில் லாத உவமைகளினாலே அதனை இகழத் தொடங்கிய இச்சைவர் "கூவலாமை குறைகட லாமையைக் கூவலோ டொக்குமோ கட" லென்றல் போல் தாம் ஒருவரே வாழும் எழுகூவலுக்குச் செந் தமிழ்ப் புலவர் வாழும் எழுகடற் பேருலகு ஒவ்வாதென்று அலறுதலைப் பொருட் படுத்தவேண்டியதில்லை.

சைவர், சைவ ரென்று பேர் வைத்துக் கொண்டு உண்மைச் சைவ நெறி இது, உண்மை வைதிக நெறி இஃதென்று அறியாத வராய் சுமார்த்த நெறியைச் சைவநெறி யென்று திரியக்கொண்டு உண்மைச் சைவ நெறியை இகழ்ந்தொழிகின்றார். "எம்பாற் சிந்தை செலுத்து மந்தணர்" என்றவாறு சிவபெருமானையே முழுமுதற்கடவுளென்று அவர் பொருட்டு ஊன்பயிலாத வேள்வி செய்வோரைச் செல்வி யாண்டு மிகழவில்லை என்பதையும், பல தேவர் பொருட்டு ஊன்பயில் வேள்வி செய்யும் வேதியரையும், அவ்வேள்வி விதிக்கும் வேதத்தையும் சைவசமயத்தவரெனவும் சைவ நூலெனவுங் கோடல் சிறிதும் அடாது என்பதையும்,

இனியேனும் இச்சைவப் பத்திராதிபர் உய்த்துணர்ந்து அடங்கு வாராக.

காரண காரிய முறைகளை ஆராய்ந்தறியுமாற்றல்சிறிது மிலராய் இவர் தமிழ் மக்கள் சிலரது தாய்மொழிப் பற்றே உலகிலுள்ள எல்லாக் கேட்டிற்குங் காரண மென்று மயக்கவுணர்ச்சியாற் பறையறையும் இவர் போல்வார் தமிழ் நாட்டில் நாளுக்கு நாள் குறைந்தொழிவார்களாக. சைவத்தை வளர்க்க முன் வந்த சைவப் பத்திராதிபர் தமது சுய அறிவு கொண்டு பொருள் ஆராய்ச்சி செய்யின் தங்கருமம் முடிக்கின்றவ ராவார். அவ்வா றன்றி வயதளவிலும், மதத்திலும் தம்மோடு ஒருசார்பு ஒத்து ஆராய்ச்சியில் அத்துணை ஒவ்வாத முதியவர் சொல்வழி நிற்றலால் பெரும்பயன் விளைப்பதில்லை. 'எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருண் மெய்ப்பொருள் காண்பதறிவு' என்ற கொள்கையை இவர் அறியற்பாலர். சொல்லுவார் யாது சொல்லினும் கேட்பார் தமது மதியைச் செம்மையாக வைத்துக் கொள்ளுதலே சால்பு. சொல்லுவார் வழியிலேயே தமது மதியையுஞ் செலுத்தினால் அம்மதி தம்மைவிட்டு அகன்று விடினும் விடும். ஆதலால் தமிழையும் சைவத்தையும் வளர்க்கும் நூலுரை போதகாசிரியர் யாவரும் ஒருமை மிக்க உள்ளத்தவராய் தம்முள் மாறுபாடும் வேறுபாடுமின்றி ஊக்கத்துடன் ஒருங்கு முயற்சி செய்து தமது பேரெண்ணத்தை நிலைநிறுத்துவார்களாக.

செந்தமிழ்ச் சைவன்.

---

## தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் நான்காவது ஆண்டு நிறைவு விழாவின்

# மங்கல வாழ்த்துப்பா

### தமிழ்த்தாய் வாழ்த்து

குறள் வெண்பா

திருநெறி சேர்ந்துவளர் செந்தமிழ்த்தாய்த் தொண்டின்
பெருநெறியே நன்னெஞ்சே பேண்.

## நேரிசை வெண்பா

எம்மணி வாசகனார் ஏத்துதமிழ்த் தென்பாண்டிச்
செங்கலைவாழ் நெல்வேலிச் சித்தாந்த—சங்கவிழா
மங்கல வாழ்த்துப்பா வந்தருளும் செந்தமிழ்த்தாய்த்
துங்கத் திருத்தாட் டுணை.

## நேரிசையாசிரியப்பா

'ஓரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப அருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமிழ் தூற்றும்' சிவஞான போதம்
ஊனுடை யுயிர்கள் உறுதுயர் நீங்கிச்
செம்பொரு ளடியிற் சேர வருளிய
வெம்பவ மறியா மெய்கண் டான்றன்
ஆண்டெழு நூற்றிரண் டீண்டிய மார்கழி
ஒருபத் தொன்பதிற் பெருமையின் வளரும்
பொன்சொரி கொன்றைப் புண்ணியச் சடையோன்
தென்பாண்டி நாட்டுத் திருநெல் வேலிவாழ்
அருள்நெறி பரப்பும் திருமிகு சைவ
சித்தாந் தக்கழ குத்தம விழாவில்
தலைமை தாங்கிய கலைவலான் அறிஞன்
திப்பியத் தமிழ்உரை சுப்பிர மணியனும்
அன்னவன் வாழ்க அருண்மிகு பெரியரும்
இப்பெரும் கழகமும் இமையவர் விரும்பும்
தமிழ்வளர் நாடும் தமிழ்வளர் சங்கமும்
சைவ உலகும் சைவச் சபையும்
தெய்வத் தலைவன் சீர்திகழ் கோயிலும்
மன்னிய புகழ்புரி வள்ளுவர் குறளொடு
பன்னிரு திருமுறை பதினான்கு சாத்திரம்
எல்லாம் வாழிய எம்பிரான் உடனுறை
அருளின் நிறைந்து அன்பொடு
ஊழி ஊழி வாழிய பெரிதே.

தமிழ்மாணவன் உலகவூழியன்

# முற்காலமுந் தற்காலமும்

(௫௱௧-ம் பக்கத் தொடர்ச்சி)

வேற்று நாட்டரசர் நம்மீது படையெடுத்து வந்து நமது பொருட்களைக் கொள்ளைகொண்டு போவதற்கு முன் பொன்னும் மணியும் சோறும் இங்கு மிகுந்திருந்த தென்பதை ஏற்றுக்கொள்ளத் தடையில்லை. அக்காலத்திற் புலவர்கட்கும் மற்றுங்கலை வல்லார்கட்கும் வேந்தரும் செல்வரும் இக்காலத்தவர் புருவந் தூக்கி வியத்தற்குரிய அத்தனை பொருட் குவை யளித்தாரென்பதும் ஒப்பத்தக்கதே. கல்வியும் ஒழுக்கமும் உயர்ந்தோங்கியிருந்தன வென்பதற்கும் சான்றுகள் பலவுள. ஆனால் இந்நாளி லிருப்பது போல் அறியாமையுங் கயமையும் முன்னாளிலில்லை யென்று கூறுவதெங்ஙனம்? கோவலனைக் கொலை செய்வித்த கொல்லனும், கௌந்தியடிகள் நரியாகமாற்றிய கயவனும், புலிபிடித்தற்கு நிறுத்திய வலைக்குளோர் குறுநரி யகப்பட்டதுபோல் தன் காதலனுக்காக இரவில் காத்திருந்த பைந்தொடியிடம் வந்த முடமுதிர் பார்ப்பானும் (குறிஞ்சிக்கலி-௬௫.) இருக்க முன்னாட்களில் அறத்தாறன்றி பிறவாறில்லை என்றியம்பலாமோ? பண்டைக்கு மிற்றைக்குமுள்ள வேற்றுமை பெரிதாய்த் தெரிகிறதே யொழிய அவற்றிற்குள்ள ஒற்றுமை வேண்டிய அளவு நமக்கு விளங்குவதில்லை. மேல் நாம் காட்டியவை யெலாம் தமிழிலக்கியங்களை யொட்டியவை. நமது நாட்டிலிவையன்றி இதிகாசம் புராண மென்ற வகைகளுள்ளடங்கும் நூல்கள் பெருகியுளவால் அவற்றையுஞ் சிறிது நோக்குதல் நன்று.

புராண இதிகாசங்களைப்பற்றிய கொள்கைகளில் வேறுபாடு சாலவுங் காணப்படும். இக்கொள்கைகளை யாராய்ந்து ஒரு தீர்மானத்திற்கு வருதல் இங்கெடுத்துக் கொண்ட பொருட்கு இடையூறாய் நிற்குமாதலால், புராண இதிகாசங்களிற் கூறப்பட்டவையனைத்தும் உண்மை யென்ற கொள்கையுடன் மேற் சென்று பார்ப்போம். பாரதகதையை விரும்பிக் கற்போருடைய உளத்தில் அடிக்கடி தோன்றுவன யாவை? அருச்சுனனது விற்

றிறமும், வீமனது உடலுரமும், கர்ணனுடைய கொடையும், கண்ணனுடைய மாயமுமாகிய இவையே. கறுத்துப் பருத்த யானைகளையும், மலைபோலசையுந் தேர்களையும் காற்றினும் விரைந்து செல்லும் பரிகளையும், எண்ணுக்குட்படாக்காலாட்களையும் நம்முன் காண்கின்றோம்; ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் அவர்களுடைய படைகொடிமாலை முரசு முதலிய சின்னங்களையும், கண்ணிறைந்த கணவரைத் தேர்ந்தெடுக்கும் மங்கையருலாவும் மன்றங்களையும் பெரிதும் நினைக்கின்றோம்; பொன்னும் வெள்ளியும் பட்டும் மணிவகை யொன்பதும் மலிந்துகிடக்கின்றன. உண்மையே; ஆனால், பாண்டவரின் தந்தை வெண்பிணியனாயிருந்ததையும் துரியோதனன் தந்தை பிறவிக்குருடனாகியதையும், கீச்சகனது தீச்செயல்களையும், சராசந்தனியற்றிய கொடுமைகளையும் நாமூன்றிப் பார்ப்பதில்லை. பகாசுரனுக்கு நாளுமொருமகனை இரையாய்க் கொடுத்து வந்த ஊராரின் துன்பமும், அரவக் கொடியோன் செய்த சூழ்ச்சிகளும், ஐவரை மணந்த பைங்கொடியின் துயிலை அரசரவையில் உரிய முயன்றதனிழிவும் நம்மகத்திற் றங்குவதில்லை. பாண்டவர் காலத்திருந்த மக்களும் நம்மைப் போலவே உண்டு உடுத்து உழைத்து உறங்கிவந்தார்களென்பதும் அவர்களுக்கும் நமக்கிருக்குமாறே துன்பமுந் துயரமும் துக்கமும் இக்கட்டு மிடையூறு மிடுக்கணுமிருந்தன வென்பதும் திண்ணம். பொய்யுங் களவுங் குடியும் தொன்னாளிலுமிருந்தன. இவற்றிற் கெடுத்துக் காட்டாகிய வரலாறுகளைப் புராணங்களிலிருந்து ஒன்றொன்றா யுரைப்பதிற் பயனில்லை. எக்காலத்திலும் நன்மையுந் தீமையும் கூடியேயிருந்துவருகின்றன. அவை விரவியிராத கால மில்லையெனக் கூறுவதிலுங் குற்றமில்லை. புராண காலத்தோர் சில துறைகளில் நம்மைவிடசாலச் சிறப்படைந்திருந்தனர் என்றொருவ ருரைப்பாராயின் அதற்கெதிராக நாமொன்றுஞ் சொல்லோம். ஆனால், அந்நாட்களில், நிறைவேயொழியக் குறைவென்பது கிடையாது, இன்பமே யொழியத் துன்பமென்பதில்லை எனச் சாற்றுவோர் கூற்றையே நாமிங்கு மறுப்பது. கன்னெஞ்சராகிய மெய்வலி மிகுந்த மைந்தர்கள் (அரக்கர்கள்) இஞ்ஞாலத்தினரை வருத்

தியது பண்டையில் நடந்ததேயன்றோ? இராமாயணத்தில் இலக்கு மணனுடைய ஒப்பற்ற உடற்பிறப் பன்பையும் அடக்கமுடைமை யையும் பார்த்துப் பெருமகிழ் வெய்தும் நாம், தன்மகன் வேந்த னாகும் பொருட்டுக் கைகேயிசெய்த சூழ்ச்சியையுங்கண்டு வருந்த வேண்டியதாகின்றது. கலியுகமென்று 'பழித்துப்பேசப்படும் இக்காலத்திலொரு சிற்றன்னை செய்வதிலிருந்து இதுசற்றேனும் வேறு பட்டதாமோ? இராவணனிடமிருந்த சீதையை இராமன் தன்னுடன் வைத்திருக்கக் கூடாதென்று கூறிய வண்ணானுடைய அறிவைப் பார்ப்போமாயின் அஃது இக்காலத்திலுள்ள ஒரு கீழ் மகனது அறிவிற்கு எள்ளளவும் மேம்பட்டதென்று சொல்ல வியலாது. காட்டில் தனியாய்த் தவித்துநின்ற தமயந்தியை வலிந்துகூட விழைந்த வேடன் இக்காலத்தவனோ, முற்காலத் தவனோ? அரிச்சந்திரனுடைய மனைவியையும் மகனையும் கடுஞ் சொற்கூறி வாட்டியகாலகண்டன் கடையூழிப்பட்டவனோ? இவற்றா லறியக்கிடப்ப தென்னவெனின், நாள் மாறுபட்டமை யால் மாந்தர் முற்றும் வேறுபடவில்லை. மக்களியற்கை பெரும் பாலும் எஞ்ஞான்று மொன்றாகவே யிருக்கின்றது. நன்மையை இடையறாது கடைப்பிடித்துத் தீமையை வெறுத்தறுத் தொழிப் பதே மக்கட் பிறவியின் நோக்கம். இந்நோக்கத்தை முன் வைத்து எந்நாளவருந் தங்களறிவிற்கேற்ப உழைத்துவந்திருக் கின்றனர். உண்மை யின்னதென்றறியாது மயங்கித் தீமையே இனிமையெனக் கருதினோரும் முன்போலவே இன்றும் உளர். ஆதலின், இப்போது உண்மையில்லை உயர்வில்லை அறமில்லை ஈகையில்லை என்று சொல்லித் திரிபவர் மேற் கூறியவற்றைச் சிறிது ஆராய்வாராக. சிறிதேனும் ஊன்றி நோக்காது இந்நாள் மக்களில் குற்றமே தவிர குணமொன்று மில்லையென்று பிதற்று வதனால் விளையுந் தீங்கிற்களவில்லை. இந்நிலப்பரப்பில் நன்மையே கிடையா தென்றெண்ணி அதைப் பிறருக்கும் போதித்துவரு மொருவன் எங்ஙனந் தனது வாழ்க்கையில் உண்மையைச் சொல்லி நன்மையைச் செய்யப்போகிறான்? கற்றவனொருவன் தன்னைப்போல் பிறருங் கற்றுளாரென்பதில் ஐயப்படுவதில்லை. உண்மைபேசமுயலுமொருவன் பிறருமங்ஙனமே செய்ய முயல்

வரென்று எண்ணுவானென்பதிற் சந்தேகமென்ன விருக்கின்றது? காமாலை யுடையவனுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள், இவ்வண்ணமே ஒவ்வொருவனுந் தன்னுளத்தி லுள்ளவற்றையே வெளியிற் காண்கின்றான். உலகிற் செம்மையு நன்மையுமில்லை யென்பவன் தனக்குச் செந்நோக்கும் நல்லெண்ணமு மில்லை யென்பதை முதலில் ஒத்துக்கொள்ளவேண்டும். இவ்வூழியில் ஒழுக்கமும் ஒடுக்கமும் அடக்கமுங் கிடையாவெனப் புகல்வோர் தம்மில் அவை யில்லையென்பதை வெளியிடுகின்றனர். மக்கள் ஈடேறவேண்டுமென்ற எண்ணத்துடன் உரைப்பெருக்கம் செய்பவர்களே இவ்வாறு ஆராய்ச்சியில்லாத சொற்களைப் பெரிதும் வழங்கித் திரிகின்றனர். இதனால் மக்களுந் தம் நிலையறியாது கலங்குகின்றனர். முன்னூழி மாந்தரினின்றும் நாம் முற்றும் வித்தியாசப் பட்டவர்களாயின் அவர்களுக்குச் சொல்லப்பட்ட வேதாகமங்களை நாமெங்ஙனம் உணர்ந்து பயன் பெறக்கூடும்? மறை முடிவுகளை யெடுத்துக்கூறும் நூல்கள் நமக்கு என்ன உதவியைச் செய்யக்கூடும்? அரிச்சந்திரன் வரலாற்றை வாசிப்பதால் நாம் பெறும் பயனென்னை? ஆகையால், முன்னாட்களிலுள்ள உயர்வைப்பற்றி நினைக்கும்பொழுது அங்கு தோன்றும் கீழ்மையையும் நாம் மறக்கக்கூடாது; தற்போழ்தைய தாழ்மையைக் குறித்து வருந்துவோர் இன்னும் நல்லவர்களிருக்கின்றார்களென்பதை யுன்னி ஊக்கமடையவேண்டும். முன்னோர்களைப்போன்ற மக்கள் தாம் நாமுமென்ற நம்பிக்கை நமக்குண்டாக வேண்டும். அங்ஙனமாயின் முன்னாட் பெரியோர் செய்த அரிய செயல்களை நாமும் நிகழ்த்துதல் கூடும். அப்பொழுது அரிச்சந்திரர்களும் இலக்குமணர்களும் சந்திரமதிகளும் சீதைகளும் நம்மில் புதுமையாகத் தோன்றுவார்கள். அங்ஙனமின்றி ஒருவன், "நான் கலிநாட்பட்டவன்; முன்னோர் சொன்னதையறியேன்; அறிவிற் சிறியேன்; என்னால் யாது கூடும்? மனைவி மக்களைக் காப்பாற்றுவதே இரவும் பகலும் கவலையாயிருக்க என் வாழ்க்கையில் உயர் நோக்கங்களைக் கையாளுவதெப்படி?" என்று தனக்குள் சொல்லிக்கொள்வானாயின் நம்மவர் முன்னேற்ற மடைவதெங்ஙனம்?

இனி, முன்னோருடைய சீரையுஞ் சிறப்பையும் காலையும் மாலையும் பெரிதும் போற்றியுரைத்து இறப்பிலும் பிறப்பிலும் உண்பதிலும் உடுப்பதிலும் அவர்களுடைய சடங்கு முறைப் படி செய்ய முயல்வோரை நாம் பெருகக் காண்கின்றோம். ஆனால் உண்மையிலும் செம்மையிலும் அவர்களைப் போலிருக்க வேண்டுமென்னும் பற்றும் அவர்களுக் கிருந்தா லன்றி சடங்குஞ் சாத்திரமும் பயன்தரா. வாய்மையால் வரும் அகத்தூய்மை இல்லாவிடத்து நீராலமையும் புறத்தூய்மை என் செய்யும்? இதுகாறும் நாம் கண்டவாற்றால் நமது மூதாதைகளுக்கும் நமக்கிருக்குமாறே இடறுகளுங் கவலைகளு மிருந்தன வென்பது விளக்கப்பட்டது. இன்னுஞ் சில கூறுவோம். பலவகை நோய் களினால் அவர்கள் வாட்டமுற்று வருந்தியது மருத்துவ நூல்கள் தொன்று தொட்டு வழங்கிவருவதால் நன்கு வெளி யாகிறது. மான், மரை, பன்றி முதலியவைகள் பயிர்களை யழித்து வேளாளர்களுடைய உள்ளங்களைப் புண்படுத்தியது மன்னர்கள்முன் குடிகள் வந்து முறையிட்டதால் தெரிகிறது. அந்நாளின் ஆறிலொரு கடமை எளிதானதன்று. பசியும் பகை யும் முன்னோ ரறியாதவையல்ல.

இனி யிவற்றின் முடிவைக் காண்பாம். நெருப்பு குளிர்ந் தும் கல் கனிந்தும் கரும்பு கைத்தும் எக்காலு மிருக்கவில்லை ஞாயிறு குறைந்தும் வளர்ந்தும் திங்கள் மாறாது நிறைந்தும் எப்போதாயினு மிருந்ததாக மொழிவாரிலர். இமயமும் விந்திய மும் இன்றிருக்குமிடத்தில் முன்னுமிருந்தன; கங்கையும் காவிரி யும் மேற்கிலிருந்து கிழக்கே முன் பாய்ந்தவண்ணம் இன்றும் பாய்கின்றன; தமயந்தி கண்டு மகிழ்ந்த செந்தாமரை நமக்கும் பூக்கிறது; சீதைக்கு வீசிய நறு மணத்தை மல்லிகைமலர் நமக் குந் தருகின்றது; மஞ்சளும் வாழையும் வேறுபடவில்லை; தென்ற லும் கொண்டலும் மாறவில்லை. தேன் வேம்பாகவில்லை; பால் நஞ்சாகவில்லை; ஒருமை பன்மையாகவில்லை; பெருமை சிறுமை யாகவில்லை. இறந்த காலத்தைக்கொண்டு நிகழ்காலத்தையறிந்து எதிர்காலத்துக்கு வேண்டியவற்றைத் தேடிக் கொள்வோம்.

இறந்த காலத்தில் மூழ்கி நிகழ்காலத்தை மறப்பதும் நிகழ்காலத்தையே கருதி எதிர்காலத்தை மறப்பதுந் தவறு. எதிர்நோக்கின்றி வாழ்வதரிது.

க. ப. சந்தோஷம், B.A., L.T.

முற்றிற்று

---

# இலக்கண விளக்க உரைச் சமாதான போலித் தேற்றம்

செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 2, பரல் 8, பக்கம் 329, கூறு 1, "இவ்விருவர் கோள்களையும் ஆதாரமாகக் கொண்டும் வேறு சில ஆதாரங்கள் கொண்டும் சமாதானம் கூறுதும்" என்பது சமாதானவாதம்.

சமாதானமென நூல்களுட் பயின்று வரும் வாக்கியமின்மையின் அது போலியாதலெவ்வாறு? அவ்வாறே அதுபற்றியெழும் பொருளும் போலியாதலறிக. அன்றன்று. சமைக்கிடம் என்று கொண்டாற் படும் இழுக்கென்னையெனின், அது நூல்வழக்கும் அதனை உள்ளவாறுணர்ந்தோர் வழக்கும் அன்மையானும் அல்லதூஉம் அவர் கருத்து அதுவன்றி வேறாதலானும் இழுக்காகாமை யாங்ஙனமென்றொழிக. அதுகிடக்க.

இனி, பாமர முறையில் சமாதானமென்பது வாதி பிரதிவாதிகள் வாதமிரண்டனையும் கொள்ளல் தள்ளல் இரண்டுமின்றி அவ்விரண்டன் பொதுமையில் பொதுமகா சனங்கள் அவ்விருவர்க்கும் அநுகூலமாக்குதலேயாம். அன்றி, அவருள் ஒருவர்க்கு மாத்திரையே அநுகூலமாக்குதலன்றாம். அஃதாக ஈண்டைச் சமாதான வாதிகள் வார்த்தைமாத்திரம் அவ்வாறு கூறியொழிந்து அதற்குமாறாக ஒருவர் வாதத்தை மறுத்து ஒருவர் வாதத்தை நிறுத்துதலின் அது போலியாதலறிக. அதுகிடக்க.

"நூல் செய்தவ னந்நூற்குரை யெழுதல், முறையோ வெனிலே அறையக்கேணீ, முன்பின் பலரே என்கண் காணத் திருவாரூரிற் றிருக்கூட்டத்தில், தமிழ்க்கிலக்காகிய வயித்திய நாதன், இலக்கணவிளக்கம் வகுத்துரை யெழுதினன், அன்றியுந் தென்றிசை ஆழ்வார்திருநகர், அப்பதிவாழுஞ் சுப்பிரமணிய, வேதியன் றமிழ்ப் பிரயோகவிவேகம், உரைத்துரை யெழுதினன் ஒன்றே பலவே" என்புழி இலக்கண விளக்கம் வகுத்துரை யெழுதினன் என்பதற்குச் சமாதான வாதிகள் கூறும் சமாதானம் வருமாறு: (செல்வி சிலம்பு 2. பக்கம் 333, கூறு 2) "வயித்திய நாதநாவலர் நூல் செய்த காலத்து அவர் தம்மிடம் படிக்கும் மாணுக்கர்களுக்கு அந்நூலுக்குத் தாமாகவே பொருள் விரித் துரைத்துப் படிப்பித்திருக்கலாம். அதைச் சுவாமிநாத தேசிகர் நேரிற் கண்டு கூறியிருக்கலாம். பின்னர் சதாசிவ நாவலர் இவ்வாறோர் விரிவுரை யெழுதிப் பிரசுரப் படுத்தியிருக்கலா" மென்பதேயாம். அஃதாவது உரையெழுதின னென்பதற்கு பொருள் விரித்துரைத்துப் படிப்பித்திருக்கலாமென்பது சமா தானவாதிக ளுரைத்து வைத்த உரையாம். இது பதப் பொரு ளன்மையின் உரையெழுதின னென்பதற்கு இவர் கூறும் உரை உபசாரமோ, உபசாரவழக்கோ, காரணகாரியமோ, காரிய காரண மோ, இலக்கணையோ, ஆகுபெயரோ, குறிப்போ, இவையனைத்தும் ஒருங்கு கூடும் கூட்டமோ அன்றி ஒரு சார்சாரும் சார்ச்சியோ என்று ஒன்றுங் கூறகிற்றிலர். (பக்கம் 333, கூறு 3) "யாம்வட நூலையே தற்பவமாகச் செய்தலின் என்று வடநூலையே காரணங் காட்டிப்போக தமிழுக்கு முதன் முதல் நூலும் உரையும் இயற் றப் புகுந்த வயித்தியநாத நாவலர் ஏனோ யாதுங் கூறாது செய் தார்" என விறைய சமாதானவாதிகள் உரையெழுதின னென் பதற்குப் பொருள் விரித்துரைத்துப் படிப்பித்தனனெனத் தாமுரைத்து வைத்ததற்கு ஏனோ யாதுங் கூறாது செய்தார். வயித் தியநாதநாவலர் நானே பொருள் விரித்துரைத்துப் படிப்பித்தேன் என்றொன்றும் கூறாதொழிய சமாதானவாதிகள் பொருள்விரித் துரைத்துப் படிப்பித்தனரென்று ஏனோகாரணங் கூறப்புகுந்தார். வயித்தியநாத நாவலர் அவ்வாறு படிப்பித்தலை நேரிற்கண்டு

சுவாமிநாத தேசிகர் கூறியிருக்கலாமென்று தாங் கூறியவாறே தாம் அதனை அநுமானப் போலிபற்றி அநுமானித்திருக்கலாம். இதுவே அவர் சமாதானம் போலியாதற் கமையுஞ் சான்றாத லறிக. அல்லதூஉம்.

நூல் செய்தார்தாமே தந்நூற்கு உரையும் உரைத்தற்கு எடுத்துக்கொண்ட எடுத்துக்காட்டு இரண்டு. சமாதானவாதிகள் அவ்விரண்டனுள் ஒன்றற்கு மாத்திரையே சமாதானம் கூறி, ஒழிந்ததற்கு உரையாமை தகுமோ தகாதோ வெனில் பிரயோக விவேக முரைத்துரை யெழுதினன், என்பதற்குச் சமாதானவுரை யுரைக்காமை குற்றமேற் குற்றமாதல் தெற்றெனவறிக. அதற் குண்மையுரையுரைப்பின் தம்முரை ஒழியுமென் றஞ்சி உரையா தொழிதல் ஒரு தலையேயாம். என்னை? மேல் வரும் 'வகுத் துரையெழுதின' னென்புழியும் கீழ்வரும் 'உரைத்துரை யெழு தின' னென்புழியும் நின்ற உரையெழுதின னென்ற இரண்டும் ஒன்றேயன்றே? அஃதாக சமாதானவாதிகள் அதற்குச்சமாதான முரைத்து இதற்கஃதுரையாமையே அவருரை போலியாதற்கு அமையுஞ்சான்றாமாகலின் "வகுத்துரையெழுதினன் அன்றியும் உரைத்துரை யெழுதின னென்புழிவரும் இருவர் வினையும் ஒன்றே என்றுணர்த்தற்குத் தம்முளியைபு காட்டுவார் அன்றியு மென்றாரென்க.

மேலையது அப்பொருட்டாயின் அன்னதாய கீழையதும் பொருள் விரித்துரைத்து மாணுக்கர்க்குப் படிப்பித்தன னென்ப தேயாம். அஃதேல் சுப்பிரமணியதீக்ஷிதர் சமாதான வாதிகள் கண்காண பொருள்விரித்துரைத்துப் படிப்பித்திருத்தல் வேண் டும். அன்றி, அவர் இஃதிவ்வாறுமென்று அநுமானித்திருக் கும் அப்போலி யனுபவம் பற்றியே அன்றோ தேசிகர் கூற்றுக் குச் சமாதானம் அவ்வாறு கூறினார். இஃதிவ்வாறாக, எனச் சங்கற்பித்தவாறே சமாதானங் கூற வந்தார்க்குச் சமாதானங் கூறமுடியாததொன்றுண்டேயன்றோ? இதனாலும் அதுபோலி யாதலறிக. அதுகிடக்க.

(செல்வி பக்கம் 331, கூறு 4) "இனி எற்பாடென்பது நாள் வெயிற்காலை என்ற சிவஞானமுனிவர் "கனலிபாடொடு பகல் செல" என்பதற்கு என்னபொருள் கண்டாரோ" என்றார் சமாதானவாதிகள். இவர் அவர்கொண்ட பொருளுணர வல்லாரல்லரென்பது இத்துணையு மோதுமோத்தா னினிது விளங்கும். "ஊசி யொடுகுயின்ற தூசும் பட்டும்" என்புழிப்போல கனலி உதித்தலாற் பகற்காலம் நடைபெறுநிற்க என்றபொருள் கண்டார் சிவஞான முனிவர். படுதல் உண்டாதல். ஆறொடுசேறலாயிற்று. ஈண்டு நடைபேற்றின் மேற்று. இதனானே சமாதானவாதிகள் சிவஞான சுவாமிகள் போலத்தாழ்ந்தவரன்மை யறிக. அஃதேல் அஃதஃதாக.

"கல்லாது முதிர்ந்தான் கண்ணில நெஞ்சம்போல்" என முன்வரும் பொருளோடு இவ்வுரை இயையாதுபோலு மெனில், அறியாது கூறினாய். உரை யெழுதினனென்பதற்கு உரையைப் படிப்பித்தான் என்றுரைத்த உரையியையினும் இஃது இயைபின்றே யன்றோ, அதுகிடக்க சமாதானவாதிகள் "கனலிபாடொடுபகல்செல" என்பது எற்பாடு என்பதற்கு நாள் வெயிற்காலை என்றுரைத்ததற் கியைய சிவஞான முனிவர் பொருள் காணமாட்டார் என்று அதனைச் சுட்டிக் கேட்டலின் அதற் கியைய அவர் பொருள் கண்டவாறு காட்டினாம். இதற்கும் அவர் வினாயவழி இயையுமாறு கூறுதும். அது கிடக்க.

"காலையும் பகலும் கையுறுமாலையும், ஊர்துஞ்சி யாமமும் விடியலுமென்றிப்பொழுது" என்றவாறே வேதவிதிக்குரிய சிறுபொழுது ஐந்தாகலானும் சமாதானவாதிகள் பிற்பகலெனப் படும் எற்பாடு ஒருகருமங்கட்கும் உரித்தன்மையானும் அல்லதூஉம் அதுவும் உளப்படச் சிறுபொழுது ஆறெனக் கோடுமெனின் மருதத்துக்கு இருவேறு சிறுபொழுது பெறப்படும். முல்லை முதலிய நான்கற்குஞ் சிறுபொழுது ஒரோவொன்றேயாதல்போல அதற்குஞ் சிறுபொழுது ஒன்றேயன்றி இரண்டென்றல் ஏலாமையானும் "எற்பாடு, நெய்தலாதல் மெய்பெறத்தோன்றும்" என்றோதுதலானும் இருந்தவாற்றான் கானல், கதிரென

வரும் இருவேறுழியும் எற்பாடென வருதல் காணப்படாமை யானும் அல்லதூஉம் எற்பாடென்பது பிற்பகலாவதன்றி முற்பக லன்றென மறுக்கும் எடுத்தோத்தின்மையினும் இன்னோரன்ன பிறவாற்றானும் சமாதானவாதிகள் சிவஞான முனிவன் பெலமில னெனக் கூறும் சமாதானம் போலியாதலறிக.

(பக்கம் 335, கூறு 4) ஆனால் "இவ்வுரை வழக்கு முடிபெ ன்னையோவென நண்பர் கேட்கின் உரையாசிரியர் நூலாசிரியர ன்று.சதாசிவநாவலரென்றே துணியக்கிடக்கின்றது" என்றுரைத் தொழிந்து (ஈண்டு நூலாசிரியரன்றென்று அவரை அஃறிணைப் படுத்துரைத்தது உய்த்துணரப்படும். படவே அவர் துணியக் கிடத்தல் துணியாதிருந்தமை காண்க. அஃதேல் அஃதெற்றாற் பெற்றாமெனின் அதற்கன்றே வரும்பொரு ளெழுந்தவென்பது) (பக்கம் 335 கூறு 5) "நூலாசிரியர் வயித்தியநாத நாவலரே உரை செய்தபோதும் தாம் உரை செய்ததென்றும் தம்மால் உரைக்கப்பட்டதென்றும் பின்னுள்ளோர் கூறுவது தமக்கும் தமது மாதாவாகிய தமிழ்த்தாய்க்கும் அழகல்லவென்று நினைத் தாவது படர்க்கையாற் கூறித் தம்புகழாகிய சொத்தை வேறு பிள்ளைக்கும் கொடாது தம்புதல்வராகிய சதாசிவ தேசிகருக்குக் கொடுத்தாரென்று கொள்வதுந் தகுதியாம்" என்றும், (பக்கம் 333, கூறு 2) "வயித்தியநாத நாவலர் நூல்செய்த காலத்து அவர் தம்மிடம் படிக்கும் மாணாக்கர்களுக்கு அந்நூற்குத் தாமாகவே பொருள் விரித்துரைத்துப் படிப்பித்திருக்கலாம். அதைச் சுவாமிநாததேசிகர் நேரிற் கண்டு கூறியிருக்கலாம்; பின்னர்ச் சதாசிவ நாவலர் இவ்வாறோர் விரிவுரை யெழுதிப் பிரசுரப் படுத்தியிருக்கலா" மென்றும் ஒன்றற்கொன்று மாறாக மூன்று வகைப்படுத்துரைக்கின்றார். அஃதாவது ஒருகால் நூல் செய் தார் அந்நூற்குரை செய்திலர் என்பது துணிபென்கின்றார்; மற்றொருகால் நூல் செய்தவரே உரையுமெழுதி அதனைத் தன்மகனுக்குக் கொடுத்தனரென்பது துணிபென்கிறார்; பின்னொருகால் அவையிரண்டுமல்ல, நூல்செய்தார் தாமே பொருள் விரித்துரைத்து மாணாக்கர்கட்குப் படிப்பித்திருக்கலா மென்கின்றார். இத்துணையெழுதும் சமாதானவன்மை இலங்கை

ஆறுமுகம் பிள்ளைக்குண்டேயன்றி இந்திய கணபதிப்பிள்ளைக்கும் இன்றென்றொழிக. அது கிடக்க.

(பக்கம் 333, கூறு 3) "தமிழுக்கு முதன் முதல் நூலும் உரையுமியற்றப் புகுந்த வயித்திய நாத நாவலரென 'நானுமறியேன் அவளும் பொய்சொல்லாள்' என்னும் பழமொழிக்கிலக்கியமாய சமாதான வாதிகள் கூறும் கூற்றுண்மையானும் (இலக்கணவிளக்கப் பதிப்புரை 2, 3) இந்நூல் மூலமும் உரையுமாகச் செய்தவர் வயித்திய நாத தேசிகரெனவும் மூலமு முரையுமாகவே ஆசிரியராலியற்றப் பட்டதெனக் கொள்வதே தகுதியெனவும், பிறிதென்னும் நயம் பற்றிக் கூறிலமெனவும் இங்ஙனமோதில மெனவும் உரையுள் வயித்தியநாத நாவலர் கூறுதலானும் அஃதற்றேயாதல் தெற்றெனவறிக.

இஃதோதியதியாதோ வெனின் (பக்கம் 355, கூறு 4) "உரையாசிரியர் நூலாசிரியரன்று, சதாசிவ நாவலரென்றே துணியக்கிடக்கின்றதென்றும், (பக்கம் 331, கூறு 1) "உரையாசிரியர் சதாசிவ நாவலரல்ல" ரென்றும் ஒன்றற்கொன்று மறுதலையாய் வரும் இரண்டனையுந் துணிதலும், (பக்கம் 333, கூறு 3) "தமிழுக்கு முதன் முதல் நூலும் உரையுமியற்றப் புகுந்த வயித்தியநாத நாவலர்" எனத்துணிதலும், "நூலாசிரியர் மாணாக்கர்களுக்குப் பொருள் விரித்துரைத்துப் படிப்பித்திருக்கலாமெனத் துணியாமையும், "இனி நூலாசிரியர் வயித்தியநாத நாவலரே உரை செய்த போதும்" எனத் துணிதல் துணியாமை இரண்டனிடைப் பட்டுத் தடுமாறுதலும், (பக்கம் 333, கூறு 1) "நம் பண்டைச் சரித்திரங்களும் நூல்களும் முந்தியது பிந்தியதாகவும் பிந்தியது முந்தியதாகவும், ஒன்று மற்றொன்றாகவும், ஒரு பாடம் பல பேதமாகவும் கிடப்பனவே யன்றி ஒரு நூலிடையுள் இன்னொருவர் சிலபாடிச் சேர்ப்பதாகவும் குறைப்பதாகவும் திரிப்பதாகவும் கிடப்பன" என்றுரைத்தொழிந்து (பக்கம் 336, கூறு 3) "வேறொருவர் சொல்வதைக் கொண்டு தீர்ப்புச் செய்யாமல் அந்நூல்களிலும் உரைகளிலு முள்ளவற்றைக் கொண்டு தீர்ப்புச் செய்வதே புல

னன்குணர்ந்தோர் கடமையாம்'' என்று மேலோதியதனை மறுத்தலும் பிறவுமாயிவ்வாறு ஒரு தலைப்படாது பலதலைப் பட்டு ''மைத்துனர் பல்கிமருந்திற்றெளிந்தறியா,'' இயல்புடைய சமாதான வாதிகள் ஓதும் ஓத்தெல்லாம் போலியாதல் ஓதியவாறெனக்கொள்க.

இனி, ஈண்டொன்று கூறியொழிதும் கூறுமாறு. ''இலக்கணவிளக்க மென்றொருபெயர் நிறீஇ, பொருள் விரித்துரைத்தனன் வயித்திய நாத தேசிகனே'' எனவரும் பாயிரத்துள் சதாசிவ நாவலர் கூற்றொன்று, ''வயித்திய நாதன் வகுத்துரையெழுதினன்'' எனவரும் சுவாமி நாததேசிகர் கூற்றொன்று, ''பிறிதென்னும் நயம்பற்றிக் கூறிலம் இங்ஙனம் ஓதிலம்'' என உரையுள் வயித்திய நாத நாவலர் தன்மைப் படுத்தோதினார் எனக்கூறுஞ் சிவஞான சுவாமிகள் கூற்றொன்று, ''நூலுமுரையுமாகவே நூலாசிரியரே செய்தார்'' என வருந் தாமோதரம் பிள்ளை கூற்றொன்று; இந்நால்வருள் முதல் நின்றார் அவர் புதல்வராய அவர் காலத்தவர். இரண்டாமெண்ணு முறையுள் நின்றார், அவர் காலத்துப் பெரியர். மூன்றாமெண்ணில் நின்றார் இருகாலத்துக்கு மிடைப்பட்ட பெரியர் நான்காமெண்ணு முறையுடையார் இக்காலத்தவர். அவற்றுள் முன்னைய இரண்டு கூற்றும் நேரிற்கண்டுகூறுங்கூற்று மூன்றாங்கூற்று நேரிற்கண்டோர்கூறும் கேள்விக்கூற்று. நான்காவது பரம்பரைக் கேள்விக்கூற்று. இவ்வாறாக நூலாசிரியரே உரையுரைத்தா ரென்பதற்குரிய இயைபு நான்கு. இனி நூலாசிரியர் உரையுரைத்திலர் என்பதற்கு அவ்வுரை படர்க்கைப்பாற்படுதல் என்னுமியைபின்மை ஒன்று. நூலாசிரியர் உரையுரைத்தாரென்பது இயை புண்மைக்குரிய:அக்காலக் கூற்று மூன்றுண்மைபோல நூலாசிரியர் உரையுரைத்திலர் என்பது இயைபுண்மைக்குரிய அக்காலக் கூற்று ஒன்றுமின்மை ஒன்று. இடைக்காலக் கூற்றின்மை ஒன்று. ஸ்ரீ தொல்காப்பியனார் செய்த மூலமும் பேராசிரியர் செய்த உரையுமென அந் நூன்முகத்துக் காணப்படுதல்போல் இந்நூன்முகத்து வயித்தியநாத நாவலர் செய்தமூலமும் சதாசிவ நாவலர் செய்த உரையும் எனக் காணப்படாமை ஒன்று. சதாசிவநாவலர் உரைசெய்தில

ரென்னுந் தாமோதரம் பிள்ளை கூற்றென்று எனவரும் இயை பின்மைக்குரிய கூற்று நான்காம். வயித்தியநாத நாவலரே உரை செய்தார் என்பதற்குரிய இயைபுநான்கு. அவ்வுரை படர்க்கைப் படுதலால் அவர் செய்திலர் என்பதற்குரிய இயை பின்மை ஒன்று. இனி சதாசிவநாவலர் உரை செய்தாரென்பதற்கு அவ்வுரை படர்க்கைப் பாற்படுதலாய இயைபொன்று. மேலோது மாற்றான், அதற்கியை பின்மை நான்கு. அவ்வியையும் அக்காலத்துக்குரிய இயைபின்றாம் என்றொழிக.

இனி ஐய மொருசாரும் மயக்க மொருசாரும் ஒரு சாரார்க்கு நிகழுமெனின், அவை நிகழாது துணிதற்குரிய கருவிகள் அப்பியாச முதலியவும் சமாக்கியை முதலியவுமாம். இயைபு நான்குண்மை அப்பியாசமாகலானும் அதுபற்றிக் காரணங் கருதப்படுதலானும் இருந்தவாற்றான் இதற்கியைபுண்மை மிகுதியாகலானும் அதற்கியைபுண்மை ஒன்றாகலானும், அக்காலத்தராதலொன்று கல்வியிற் பெரியராதலொன்று என்ற முன்னைய கூற்று மூன்றும் வன்மைப்பால வாகலானும் அவ்விரண்டுமின்மையில் பின்னையது மென்மைப்பாற்றா யிற்றாகலானும் "சுருதி ஸ்மிருதி விரோதே சதி சுருதி பலீயது" அஃதாவது சுருதி மிருதி யிரண்டுந் தம்முண் முரணுமாயின் சுருதியே வலியுடைத்து என்னும் வசனமுண்மையின் அஃதாக அவ்வன்மை மென்மை அவ்விரண்டுஞ் செய்தார் வன்மை மென்மை பற்றியாகலானும் ஈண்டும் அவ்வாறே உரையுரைத்தார் வைத்தியநாதநாவலரெனக் கூறும் கூற்றுடையர் வலியராகலானும் அவரல்லரெனக் கூறுங் கூற்றுடையர் மெலியராகலானும் இன்னோரன்ன பிறவாற்றானும் நூலாசிரியரே உரையாசிரியர் என்பதற்கு இதுவே அமைதி யெனக்கொள்க. "பொருள்கள் தம்முள் முரணும்வழி வலியவற்றான் மெலியவை கண்டிக்கப்படும்" என்னும் எடுத்தோத்தும் ஈண்டுய்த்துக்கொண்டுணரப்படும். பிறவுமன்ன.

அஃதேல் படர்க்கை வாய்பாட்டாற் கூறுங் கூற்றைத் தள்ளிக் கொள்ளல் தகுமோவெனின் ஈண்டொன்று வினாவுதும். அஃதேல் சுருதியோடு முரணும் மிருதிக்கூற்றைத் தள்ளிக்

கொள்ளல் தகுமே கொல்லோ? அது சுருதியோடு முரணும் வழித் தள்ளற்பாற்றென்பது பற்றித் தள்ளப்படுமாறுபோல அஃதறிவர் மூவர் வசனத்தோடு முரணுதலின் தள்ளப்படுதல் இழுக்கின்மையறிக.

இதுகாறுங் கூறும் அமைதி இயைபின்மைக்குரிய உண்மையேது காட்டுமுகத்தால் இயைபின்மை காட்டப் பெறின் உடம்பட்டுக்கோடும். அன்றிப் பொய்யேது கூறப்படின் அது சுருதி முறையறிந்தோர் உடம்படாரென்பது மேலோதுமோத்தானினிது விளங்கும்.

சா. பெரியசாமிப் பிள்ளை,
தமிழ்ப் பண்டிதர்,
போர்டு ஹைஸ்கூல், விருத்தாசலம்.

---

# குடடிக்குறள்

## சிறுமறை

(௪௩௧-ம் பக்கத் தொடர்ச்சி)

### நன்றி யறிவு

தனிவரு நன்றிக் குலகெலாஞ் சரியே ?
காலச்சிற் றுதவி ஞாலத்திற் பெரிது.
எதிர்பாரா வுதவிப் பயன்நீரிற் பெரிது.
தினைநன்றி பனையாச் சீரிய ரறிப.
௱௫. உதவிக் களவிலை தகுதிய தளவே.
உறுபோதி னுதவி யருநேய மறவேல்.
விழுமநீக் கினரை யெழுமையும் மறவார்.
நன்றி நன் றுள்ளார் கன்றுநெஞ் சுள்ளார்.
கொன்றன்ன வேனும் நன்றொன்றுற் றீரும்.
௱௰. செய்நன்றி கொன்றார்க் குய்வென்று மின்று.

## நடுவு நிலைமை

பகுதியோர்ந் தொழுகல் தகுதியா மென்ப.
செப்பத்தா னாக்கம் எச்சத்து முறுதி.
நடுவிலா வாக்கம் விடுதலே யாக்கம்.
தக்கார்க ளென்கை யெச்சத்தா லறிப.
௱௰௫. கேடு நன்றல்ல கோடாமை யணியே.
நடுவொரூஉ நினைவிற் கெடுவ லென்றறிக.
நடுவாளன் றாழ்வை வடுவாக வையார்.
துலைக்கோலி னிலையர் கலைப்பால பெரியர்.
சொன்மனங் கோணாத் தன்மையே நடுவு.
௱௨௰. பேணியாற் றுவதே வாணிபப் பேறு.

## அடக்கம்

அடக்கம்வா னுய்க்கு மடங்காமை நிரயம்.
ஆக்கமா வடக்கங் காத்திடற் பாற்று.
ஆற்றடங் குநரைப் போற்றுமெவ் வுலகும்.
பணிவுளான் றோற்றம் மலையினும் பரிது.
௱௨௰௫. அடக்கமே செல்வந் திடத்தது பொதுவே.
செம்மையைந் தடக்கி னெம்மையுங் காக்கும்.
நாவடங் குதலாற் றீயவை பிறவா.
ஒன்றேனுந் தீச்சொல் நன்றியாவு மாய்க்கும்.
தீப்புண்ணாற் றிடலாம் நாவடுமா றாதே.
௱௩௰. அகத் தடங்கியார்பா லறத்தெய்வஞ் சாரும்.

## ஒழுக்கம்

ஒழுக்கமே விழுப்பம் உயிரினும் பெரிது.
பலவாற்றி னானுந் துணையாவ தொழுக்கம்.
ஒழுக்கமே குடிமை யிழுக்கமா மிழிமை.
மறையினுங் கற்பா னிழியினா கானே.
௱௩௰௫. தீயாரி னாக்கம் ஆகாரி னுயர்வே.
உறவாள ரறிவார் பிறவேதம் படுதல்.
ஒழுக்கத்து மேன்மை யிழுக்கத்துப் பழியே.

நன்றிவித் தொழுக்கந் குன்றும்மற் றிழுக்கம்.
ஒழுக்கத்தார் தீய வழுக்கியுங் கூறார்.
உலகத்தோ டொழுகார் பலகற்று மென்னும்?

## பிறர்மனை

அறம்பொரு ளுணர்வார் பிறன்மனை நயவார்.
பிறன்கடை காப்போ னறன்கடைப் பேதை.
தெளிந்தாரில் விழைவா னிறந்தாரி னுழல்வான்.
தினைப்பிறனில் விழைவார் பனைத்துணையு மழிப.
எளிதென்னும் பிறனில் விழைவென்றும் பழியே.
பழியச்சம் பாவம் பகையயலிற் படுமே.
பிறனில்லைக் கருதா னறனில்லைத் துறைவான்
அயல்கருதா வாண்மை யான்றவொழுக் கென்ப.
நலக்குரியார் பிறனில் புலக்கருதா தவரே.
அறப் புறத்தா ரெனினு மயற்கருதார் பெரியர்.

## பொறுமை

அகழ்நில மனைய திகழ்பொறைத் தலைமை.
பொறுத்தலின் மறத்தல் சிறப்பரு ளுவது.
அறியாரைப் பொறுத்தல் பெரியார்தங் கடமை.
பொறை மையைப் போற்றின் நிறையகம் தாற்றும்.
பொறுத்தவ ருலகிற் புகழ்த்தலை நிலைஇயர்.
ஒருமுறை பொறுத்தார்க் கிறும்வரை யின்பம்.
பிறர்பிற செயினும் அறநெறி தவறேல்.
மிகுதி செய்தாரைத் தகுதியான் வெல்க.
இறந்தார் வாய்க்காயார் துறந்தாரிற் றூயார்.
இன்னாவிற் பொறைமை யுண்ணாதிற் பெரிது.

## அழுக்காறு

அழுக்காறி லாமை யொழுக்காறு மென்ப.
அழுக்காறில் லாயின் விழுப்பேறுன் றியாதே?
அறனாக்கம் வேண்டான் பிறனாக்கம் பேணான்.
இழுக்காற்றி னேத மழுக்காற்றி னடைப.

௱௬௫. அழுக்கா று மறைவிற் றனக்கூறே புரியும்.
ஈதல்பொருள் சுற்றம் நோதலுறீஇச் சாகும்.
அழுக்காறுற் சுட்டித் திருச்சீரா ணீங்கும்.
திருவொழியத் தீய சேர்க்குமழுக் காறே.
அவ்வியவான் செல்வஞ் செவ்வியர்நோ யாய்ப.
௱எ௰. ஆருமை வறுமை யஃதறலே பெருமை.

## வெஃகாமை

பிறர்பொருளின் மனமே எறுமவர்தங் கனமே.
நடுநிலையஃ காதார் படுபயன்வெஃ காரே.
மற்றின்பம் வெஃகிற் சிற்றின்பம் வெஃகேல்.
அறிஞர்பிறர் பொருளைவறிஞ ரெனக் கருதார்.
௱எரு. ஆயறிவென் பயனே தீவெறிய செயினே?
பிறர்பொருள் வெஃகிடுவோ ரறவழியிற் கெடுப.
அயலாக்க விழைவிற் பயனேக்க விளைவே.
பிறர்பொருளைக் கருதார் பொருளறனும் பெருகும்.
அறனுடை வெஃகாரைத் திருவலிதே சேரும்.
௱அ௰. வெஃக லழிவதனி னஃகல்புக ழாமே!

## இகழாமை

அறங்கூறு னெனினும் புறங்கூறு னினியன்.
அறம்பொய்த்த றன்னிற் புறம்பொய்த்த றீது.
முன்புகழ்வான் சாவு நன்குநிகழ் வென்ப.
பின்கூறு வதனின் முன்கோற வினிது.
௧௮௫. அறச்சொல்லா னன்மை புறச்சொல்லா னறிப.
பழிகூறு மவனே பழிகார னென்ப.
நகச் சேரார் கேளிர் பகக்கூறு வாரே.
தன்னுரியா ரிகழி னென்னைகொலா மயலே?
புறச் சொல்லாற் பொறைமை யறத்தாறு போலும்.
௧௯௰. பிறர் போற் றற்கருதிற் பிறிதாக்க மெதுவே.

(தொடரும்) சுகவனம்-சிவப்பிரகாசன்,
காவேரிப்பட்டணம்.

# மனுநீதிகண்ட சோழன் வரலாறு

செந்தமிழ் நாட்டு முடியுடை மூவேந்தர் குடியில் ஒன்றாகிய சோழர்குடியில் பிறந்து, புகழை நிலை நிறுத்திய இம்மன்னன் வரலாறு தொன்று தொட்டு நம் நாட்டில் வழங்கிவருவதொன்றாகும். இவனைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் பண்டைத் தமிழ் நூல்களிலும், பிற்காலத் தமிழிலக்கியங்களிலும் பரந்து கிடக்கின்றன. இவன் வரலாறு நிகழ்ந்த இடம் சோழ நாட்டுத் திருப்பதியாய திருவாரூர் என்றே எல்லாராலும் கொள்ளப் படுகின்றது. அதற்குத் தக்க சான்றுகள் திருவாரூரிலும், அவ்வூரைப் பற்றிய தமிழ் நூல்களிலும், "திருத்தொண்டர் வரலாற்றிலும்" கிடைக்கின்றன. இதுநிற்க.

பண்டைய தமிழ்க் காப்பியமாகிய "சிலப்பதிகாரத்"திலும், "பழமொழி" "விக்கிரம சோழன் உலா" முதலிய நூல்களிலும் உள்ள வரலாற்றுக் குறிப்பை ஆராயுங்கால் திருத்தொண்டர் வரலாற்றிற் கூறப்பட்ட மனுநீதி கண்ட சோழன் வரலாற்றிற் பல, உண்மையோ? அன்றோ? என்னும் ஐயம் பிறப்பது இயற்கையே. ஆதலால் திருத்தொண்டர் வரலாற்றிற் கூறப்பட்ட மனுநீதிகண்ட சோழன் வரலாற்றையும், மற்றைய நூல்களால் அறியப்படும் அவன் வரலாற்றையும் ஒருவாறு எடுத்துக்கூறி இக்கட்டுரையை முடிக்கின்றேம். அறிஞர்கள் இதனை முடிந்த உரையாகக் கொள்ளாது ஆராய்ந்து உண்மை காணவேண்டும் என்பதே எனது முடிந்த கொள்கையாகும். இவ்வாராய்ச்சியை, தமிழ் நூல்களில் உள்ள இவன் வரலாற்றுக் குறிப்புகள், திருத்தொண்டர் வரலாற்றால் அறியப்படும் மனுநீதிகண்ட சோழன் வரலாறு, இவன் பெயரைப்பற்றிய ஆராய்ச்சி, உறைவிடத்தைப்பற்றிய ஆராய்ச்சி, வரலாற்று நிகழ்ச்சியைப்பற்றிய ஆராய்ச்சி, இவ்வாராய்ச்சியால் பெறப்படும் வரலாறு என இத்தலைப்பெயர்களின் கீழ் முறையே ஒவ்வொன்றையும் சுருங்கக்கூறி முடிக்கின்றேன்.

## தமிழ் நூல்களில் உள்ள இவன் வரலாற்றுக் குறிப்புகள்

'எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத் தான் தன்
அரும் பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப் புகார்.'

'பெருஞ் சோறு பயந்த திருந்துவேல் தடக்கை
திருநிலை பெற்ற பெருநா ளிருக்கை
அறன் அறி செங்கோல் மறநெறி நெடுவாள்
புறவு நெறி புக்கோன் கறவை முறை செய்தோன்
பூம்புனற் பழனப் புகார் நகர்.'

'புறவு நிறைபுக்குப் பொன்னுலகம் ஏத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்யா ரம்மானை
குறைவி லுடம்பரிந்த கொற்றவன் முன்வந்த
கறவை முறை செய்த காவலன் காண் அம்மானை
காவலன் பூம்புகார் பாடேலோ ரம்மானை' (சிலப்பதிகாரம்)

'மையல் கூர்
சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரின்
மைந்தனை யூர்ந்த மனுவேனும்' (விக்கிரமசோழன்உலா)

'மருளும் பசுவொன்றின் மம்மர் நோய்தீர
உருளுந் திருத்தேர் உரவோன்' (இராசராசசோழன்உலா)

'சாலமறைத் தோம்பிச் சான்றவர் கைகரப்பக்
காலை கழிந்ததன் பின்றையும்—மேலைக்
கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையு மூர்ந்தான்
முறைமைக்கு மூப்பிளமை யில்' (பழமொழி நானூறு)

'மகவிரதத் துருளியினோர் சுரபிதுயர்
தணித்திடுவான் மகிழ்வுற் றூர்ந்தும்

சகமுழுதும் ஒருதனிக்கோல் செலுத்து மனுகுல
வேந்தர்தமிழ்ச் சோணாட்டில் (அரிசமய தீபம்)

இவையன்றித் திருவாரூரைப் பற்றிக் கூறும் நூல்கள் பல வற்றிலும் இவர் வரலாற்றைப் பரக்கக் காணலாம்.

## திருத்தொண்டர் வரலாற்றால் அறியப்படும் மனுநீதி கண்ட சோழன் வரலாறு

ஒருகாலத்தில் திருவாரூரில் மனுச்சோழன் என்பவன் அரசியல் நடாத்தி வந்தான். அவன் மனுவால் இயற்றப் பட்ட அறநூலுக்கு மாறுபடாமல் தன் அரசியலை நடத்தியதால், மனு நீதிகண்டசோழன் என்னும் காரணப் பெயர் பெற்றான். இவனுக்குத் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் திருவருளால் ஒரு பிள்ளை பிறந்தான் (இப்பிள்ளையின் பெயர் வீதிவிடங்கன் எனப் பிற்கால நூல்களிற் கூறப்படுகின்றது). அம்மைந்தன் எல்லாக் கலைகளிலும் வல்லுநனாகி அரசியல் நடத்துதற்குத் தகுதி யுடையனாயினன். ஒருநாள் இவன் கோயிலுக்குச் சென்று இறைவனை இறைஞ்சித் தேரின்மீதேறித் தனது அரண்மனைக்குத் திரும்பி வந்துகொண் டிருந்தான். நடுவழியில் ஓர் பசுவின் இளங்கன்று துள்ளிக்கொண்டோடி வந்து அரச குமாரன் இவர்ந்து வந்த தேருருளையில் அகப்பட் டிறந்தது. இதுகண்ட மன்னன் மகன் தாய்ப் பசுவின் துயரத்தைக் காண மனம்பொறாதவனாய் வருந்தினான். பின்னர் ஒருவாறு மனந்தேறி இப்பாவத்தை நீக்குதற்கு வேண்டிய செயல்களைச் செய்வதன் பொருட்டு அந்தணர்களிடம் அணுகினான்.

உடனே அக்கன்றை யிழந்த பசு மனுநீதிகண்ட சோழன் அரண்மனையை யண்மி ஆண்டுத் தொங்கியிருந்த ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பினால் ஆட்டி ஓசையுண்டாக்கிற்று, அரசன் அவ்வோசையைக் கேட்டான். அப்பொழுதே அரியாசனத்தைவிட்டு அகன்று அரண்மனைவாயிலை அடைந்தான். வாயிற்காவலர் வணங்கி நின்று, பசுவின் செயலை மன்னனுக்

குப் பகர்ந்தனர். அரசன் அண்டையில் நின்ற அமைச்சர்களை நோக்கிப் பசுவிற்கு நேர்ந்த பருவரல் யாதென வினவினன். அமைச்சர்களில் ஒருவன் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் நவின்றான். அதுகேட்ட அரசன் அந்தோ! எனது அரசாட்சியிலும் இத்தகைய அடாச்செயல் நடக்க நேரிட்டதே! இவ்வாவின் துயரை எவ்வாறு போக்குவேன்! என்று இங்ஙனம் பலவாறு வருந்தினான். அமைச்சர்கள் அனைவரும் அரசனை நோக்கி, அரசே! தாங்கள் இவ்வாறு வீணாகத் துயருறுவதால் வரக்கடவதொன்றுமில்லை. ஆதலால் ஆக்கொலைக்கு அறநூல்களிற் கூறப்பட்ட பிராயச்சித்தத்தை நும் மகனைக்கொண்டு நடப்பித்தலே நன்றென்றனர். இதனை மன்னன் செவிக்கொள்ளாதவனாய், இப்பசு, தன் கன்றை யிழந்து வருந்துதல் போல என் மகனை யிழந்து வருந்துவேன் என முடிவு செய்தான். உடனே ஓர் அமைச்சனை விளித்துத் தன் மகனைத் தேரூர்ந்து கொன்று வருமாறு கூறினான். மற்றைய அமைச்சர்கள் மன்னனைவிட்டு அகன்றனர். அரசனால் இளவரசனைக் கொல்லுமாறு ஏவப்பட்ட அமைச்சன் அச் செயலைச் செய்தற்குத் துணியாதவனாய்த் தற்கொலை செய்து கொண்டு இறந்தான். ஆதலால் அரசன் தானே தேரூர்ந்து சென்று, தன்மகன் மீது செலுத்திக் கொன்றான். உடனே சிவபெருமான் காட்சிதந்தருளினார். அப்பெருமான் அருளால் பசுக்கன்றும், தற்கொலை செய்து கொண்டிறந்த அமைச்சனும், மன்னன் மைந்தனும் உயிர்பெற்றெழுந்தார்கள். உம்பர்கள் மலர் மழை பொழிந்து மகிழ்ந்தனர்.

## இவன் பெயரைப் பற்றிய ஆராய்ச்சி

பண்டைத் தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் இவன் வரலாறு வந்துள்ள இடங்களிலும் பழமொழியிலும் இச்சோழன் பெயர் இன்னதெனக் காணப்படவில்லை. இதனால் அக்காலத்திலேயே இவன் பெயர் அறிந்து கொள்ள இயலாது மறைந்து போயிற்றென்று ஊகிக்க இடந்தருகின்றது. விக்கிரம சோழன் உலாவிலும், திருத்தொண்டர் வரலாற்றிலும், அரிசமய

தீபத்திலும் மனுவேந்தன் என்ற பெயர் காணப்படுகின்றது. இப்பெயருக்குக் காரணமும், முன்னூலில் இல்லாமல் பின்னூல்களில் இவ்வாறு கூறியதற்குச் சான்றும் யாதோ! அறிவதற்கில்லை. மனுசெய்த அறநூலின்படி இவன் அரசியல் நடத்தினதால் மனுநீதிகண்டசோழன் என்னும் பெயர் பெற்றான் எனத் திருத்தொண்டர் வரலாற்றால் அறியக்கிடக்கின்றது. இதை ஆதாரமாகக் கொண்டுதான் பிற்காலத்தில் மனுநீதி கண்ட சோழன் என வழங்கி யிருக்கலாம். இவன் பெயருக்குக் கூறும் காரணம் எத்துணைப் பொருத்தம் உடையதென்பதைச் சிறிது ஆராய்வாம். சங்க இலக்கியங்களில் மனுநூலைப்பற்றிய குறிப்புகள் காணப்பட வில்லையென்றே கூறலாம். அன்றியும் அக்காலத்தில் அம்மனு நூல் நமது நாட்டில் வழங்கியிராதென்றே எண்ண வேண்டியிருக்கின்றது. இச்சோழ அரசனே கடைச் சங்க காலத்திற்கு மிகவும் முற்பட்டவன் என்பதற்கு சிறிதும் ஐயம் இன்று.

(தொடரும்)  சா. சிதம்பரன்,
கரந்தை.

---

# குழந்தைகளின் நல்வளர்ப்பு

I

உலகிலுள்ள மக்கள் எல்லாரும் பலப்பல வழிகளில் முன்னேறிவரும் இந்நாளில் நம்தமிழ் நாட்டார் ஒன்றிலும் முந்துறாது இருத்தல் நமக்கு வியப்பையும் வருத்தத்தையும் உண்டு பண்ணுகின்றது. ஆங்கில நாட்டார் நம் வாழ்நாளை நல்லவாறு ஆக்கிக்கொள்ளுதற்கு எஃது இன்றியமையாததோ எதில் பிற்கால வாழ்க்கை நிலையுற ஏதுவாயிருக்கின்றதோ அதனை, அதனை, எல்லாம் குறிக்கொண்டு நோக்கி ஆவனசெய்து போதருகின்றார். நம்மவரோ, நாம் எதனால் தாழ்வடைந்தோமோ எது நம்மைத் தாழ்வடையச் செய்துவருகின்றதோ அதனை இன்னும் பாராமலும் ஒருசிலர் பார்த்தாலும் விலக்குவன விலக்கிச் சேர்ப்பன

சேர்த்தற்கு வலி இல்லாதவராயும் இருத்தல் ஒருபெருங் குறையேயாகும்.

முதலில் மக்களை வளர்த்தலை எடுத்துக்கொள்வோம். அதில் ஆங்கிலேயர் வளர்ச்சி (விருத்தி) யடைந்துவரும் அவ்வளவு நம் தமிழர் இல்லையென்பது தெளிவாய் விளங்கும். சிலர் பண்டைத் தமிழரைக் காட்டினும் நாம் தேர்ந்துள்ளோம்? அவர்கள் இவற்றை எல்லாம் பொருட்படுத்தி எண்ணினார்களா? அவர்கள் அவ்வளவாய்க் குறிக்கொண்டு நோக்காத ஒரு செய்தியில் நாம் ஏன் வீண் எண்ணம் கொள்ளவேண்டும் என்கின்றனர். இக்கேள்விகளுக்கு விடையளித்தல் இன்றியமையாததே. பண்டைக் காலத்து மக்களுக்கு இந்நாள் சீர்பெற்று ஒழுங்குற நடக்கின்றதாய் எண்ணப்படும். அவைகளெல்லாம் இயற்கையிலேயே அமைந்துகிடந்தன. அவர்கள் அவற்றை எண்ணிச் செய்யாதபடி எளிதில் அமைந்து கிடந்தால் அவர்கள் அவற்றைப்பற்றி நோக்காதிருத்தல் சாலப் பொருத்தமுள்ள தொன்றேயாம். எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டைச் சொல்லுவோம். இப்பொழுது திறந்த வெளிவாழ்க்கை மேல் என்று எல்லாரும் அதனை அவாவுகின்றனர். இத்திறந்த வெளிவாழ்க்கை பண்டு இயல்பாகவே அவர்கட்கு அமைந்திருந்தன. அறிஞர்களாய் வாழ்ந்த அப்பண்டைக் காலத்தவர் உடல் ஓம்பும் நல்வழிகள் பலவற்றையும் நன்கறிந்து அவற்றிற்குத்தக நடந்து வந்தார்களெனக் கேள்விவழியாயும் நூல் வழியாயும் அறிகின்றோம், இரண்டாவதாகப் பெண்கள் குழந்தை பெறுங்காலம் இக்காலத்தில் வருந்தும் அவ்வளவு பண்டைநாளில் இல்லை. பண்டைப் பெண்களெல்லாம் கூடியவரை நல்லகாற்றை உட்கொண்டு அவர்கள் செய்யவேண்டிய வேலைகளையும் நன்கு செய்துவந்திருக்கின்றனர்.

இக்காலத்தில் பெண்கள் அவ்வாறு இல்லை. வேலை செய்வது இழிவென்றும் வெளியில் வருதல் நம்தகுதிக்கு ஏற்றதொன்றன்று என்றும் எண்ணிப் பலவாறாய் அல்லலுக்கும் ஆளாகின்றனர். ஐயோ! பின்னர் இவர்கள் தம் உடல் நிலையைச் சரிசெய்து கொள்ள ஆங்கில நாட்டு மருத்துவங் கற்ற ஒருவர் இன்றியமை

யாது வேண்டும் தறுவாயில் வந்து விடுகின்றனர். அப்பால் அம்மருத்துவர் வந்து பிறரோடு பேசக்கூடாதென்றும், இந்நாட்டுக்குப் பொருத்த மில்லாத உணவை உட்கொள்ள வேண்டும் என்றும் இன்னும் சிலவும் கட்டளையிடுகின்றார். அதற்கு இசைந்து தம் அருமை வாழ்நாளை ஒருவாறு கழிக்க ஒருப்படுகின்றனர். அந்தோ! செய்யும் காரியங்கள் சிலவற்றைச் செய்தற்கு நாணி நிற்கும் இவர்கள் பின்னர் செய்யாக் காரியங்களைச் செய்தற்கும் நாணத்தை விடவேண்டியவர்களாகின்றார்கள். இப்பொழுதுள்ள நமது வாழ்க்கையானது பலவழிகளிலும் இயற்கைக்கு மாறுபட்டுள்ள தென்பதையும் நம் பண்டைத்தமிழர் முன்னை நாளில் நம்மைப்போலல்லாமல் இயற்கையாகவே நல்வாழ்வை யநுபவித்து வந்தார்களென்பதையும் விளக்க எண்ணிறந்த செய்திகள் நமக்குப்புலப்படினும் இவ்விரண்டைமட்டுமே ஈண்டுக் குறித்துள்ளேம்.

செய்வன அறிந்து செய்து ஒழுகினால் வரும் இழுக்கு என்னையோ? இளமையிலிருந்தே ஒழுங்காய்வளர்க்கப்பட்டு வரும் குழந்தைகட்கும் வளர்க்கவேண்டிய வகை தெரியாத பெற்றோர்களால் வளர்க்கப்பட்டு வரும் குழந்தைகட்கும் எவ்வளவு வேறுபாடு இருக்கின்றது என்று உற்றுநோக்குங்கள். இளமையில் ஏறும் பழக்கங்கள் இறப்புவரை மாறாதென்பது அநுபவ வாயிலாய்க் கண்டறிந்த உண்மை. ஆகவே அவ்விளமைக் காலத்தை எவ்வாறு போற்றிவளர்க்கப்பட்டு வரவேண்டும் என்பது நன்கறிய வேண்டியதொன்று. ஆண்டு முதிர்ந்த பின்னர் நாம் இதனினும் பன்மடங்கு முயற்சி உஞற்றினும் நலம் பயவாதென்பது தேற்றம். இதனாலேதான் இளமைக் காலத்தை அறிவு நூல்களையும் உலகியல்புகளையும் கற்கும் காலமாக ஆன்றோர் வகுத்தருளி யிருக்கின்றார் என்று அறியக்கிடக்கின்றது. எனினும் இப்பொழுதுள்ள நம்தமிழர்கள் இவ்விளமையின் முக்கியத்தையும் அக்காலத்தில் தாங்கள் தங்கள் குழந்தைகளுக்குச் செய்யக்கடமைப் பட்டுள்ளவைகள் என்னென்ன என்பதையும் அறவே மறந்து தாங்கள் பொருள் வருவாயைத் தேடுவதிலும் தேடியபொருளை பல வழிகளில் செலவிடுதலிலும் மட்டுமே

கண்ணும் கருத்துமாயிருந்து தங்கள் வாழ்நாளைக் கழிக்கின்றார்கள். இவ்வாறிருத்தல் மிக வருந்தத் தக்கதே. இனி நம் தமிழ் மக்கள் பண்டைத் தமிழரைப்போல் சீரும் சிறப்பும் உற்று உயர்ந்து விளங்க விரும்புவார்களாயின் உண்பதிலும் உறங்குவதிலும் காலம் கழித்தலைக் கைவிட்டு இனி வரும் மக்கட் பிறப்பினரை முன்னுக்குக் கொண்டுவர வழி தேடுதலே அவர்கள் கடமையாகும்.

குழந்தையின் நல்வளர்ப்பு என்றதில் தாயின் வயிற்றில் கருக்கொண்ட நாள்முதல் அங்கே பத்துத் திங்கள்காறும் வளர்க்கப்பட்டு வருதலும் அடங்கும். ஆகவே இச் செய்தியின் ஒரு பகுதியாக குழந்தையின் கருப்ப வளர்ச்சியும் கருதப்படல் வேண்டும். இதைக்குறித்து ஈண்டுச் சிறிது கூறுதல் இன்றியமையாதது ஆகும். மக்கள் ஒவ்வொருவரின் தன்மையும் அவரவரது கருப்பவளர்ச்சி முதற் கொண்டே உறுதிசெய்யப்படுகிறது (தீர்மானிக்கப்படுகிறது). ஆதலால் இக்கருப்பவளர்ச்சி நமது செய்தியில் முதலாவதான ஒருபாகம் ஆகும். பொதுவாகக் கூறும் இடத்து ஒவ்வொருவரின் குணமும் அவரவரது இயற்கையாலும் செயற்கையாலும் ஆக்கப்படுகின்றது. இயற்கை என்பதில் ஒருவன் தன் முன்னோரிடம் இருந்து அடைந்த குணங்களும் ; அவன்கருத்தரிக்கும் காலத்தில் அடைந்துள்ள ஏனைக் குணங்கள் பலவும் அடங்கியிருக்கின்றன. செயற்கை என்பதில் கரு உற்பத்தியான பின்னர் அதனோடு சேர்க்கப்படும் நுகர்ச்சிகள் (போஷிப்புகள்) யாவும் சுற்றுப் பக்கங்களிலிருந்து இக்கருவைத் தொடர்ந்துள்ள பல செய்திகளும் அடங்கியுள்ளன. இயற்கை இன்றிச் செயற்கையும் செயற்கை இன்றி இயற்கையும் பயன்படா. ஒவ்வொரு மக்களும் முதலில் மிகச் சிறியதோர் உயிர்ப்பொருளாய் இருந்து (ஜந்துவாயிருந்து) *காலஞ் செல்லச் செல்ல முதிர்ச்சியடைந்து ஆடவராகவோ பெண்டிராகவோ ஆகின்றார்கள். இத்தகைய குழந்தை வளர்ந்தே முழுமனிதனும் பெண்ணும் ஆகின்றபடியால் இவ்வளர்ச்சியையும் இவ்வளர்ச்சியைக் குழந்தை கருப்பத்தில் இருக்கும்பொழுது முதற்

கொண்டு கொடுத்துவரும் தாயின் நலத்தையும் நாம் குறிக்கொண்டு நோக்குதல் இன்றியமையாதது ஆகும்.

மக்கள் எல்லாரும் ஒரே (சமமாகவாவது) படியாகவாவது ஒருவகையினராகவாவது பிறக்கவில்லை. இவர்கள் குழந்தைகளும் பிறக்கும்பொழுது ஒன்றோடொன்று மாறுபட்டு இருக்கின்றனவேயன்றி வேறில்லை. நாம் முன்குறித்தபடி குழந்தையின் நல்வளர்ப்பு என்ற செய்தியில் இயற்கையும் செயற்கையும் இணைக்கப்பட்டுள்ளன. ஆதலால் இவற்றில் ஒன்றைமட்டிலும் வைத்து ஒருகுழந்தையின் நலத்தையாவது கேட்டையாவது உறுதிசெய்தல் ஒரு சிறிதும் பொருந்தாது.

எடுத்துக்காட்டாக ஒன்றைக் கூறுவோம்: நாம் நமது குழந்தைக்கு நல்ல செயற்கையைக் கொடுக்கின்றோம். அதாவது நல்ல உணவு, தூயகாற்று, வீட்டில் போதிய வெளிச்சம், வீட்டைச் சுற்றிய இடங்கள் மிகவும் தூய்தாய் இருத்தல் முதலியவைகள் மிகச்செவ்வையாயிருக்குமாறு செய்து வைத்திருக்கின்றோம். என்றாலும் நம் குழந்தை பிணியினால் வருந்துகின்றது. இத்துன்பத்துக்குக் காரணம் மிகவும் ஆழத்தில் இருக்கின்றது. இக்குழந்தையின் ஊனமான இயற்கையே இந்நோய்க்குக் காரணம் ஆகும். இனி மற்றொருசாரார் தங்கள் குழந்தைகளின் வளர்ப்புத் தொழில் முழுவதும் கடவுளைப் பொறுத்ததே என்ற தத்துவம் பேசி வாளாயிருந்து விடுகின்றனர். அந்தோ! இவர்கள் அறிவின்மையால் இக்குழந்தைகள் அனுபவிக்கும் கெடுதல்களுக்கு ஓர் எல்லை இல்லை. இவ்வகைய பெற்றோர்கள் குழந்தைகளின் செயற்கையைச் சிறிதும் கவனியாது ஒழிகின்றார்கள். இத்தகைய வழிகளிலிருந்து நம்தமிழ் நாட்டு நன்மக்கள் விலகி மிகவும் முதன்மையான நம் கடமையாய குழந்தைகளின் நல்வளர்ப்பைக் கையாடவேண்டுவது இன்றியமையாதது.

இனி குழந்தைகளின் தன்மையைப்பற்றிக் கூறுவாம். குழந்தைகட்கு ஓர் ஆண்டுகழிந்த உடனேயே கண்டபடி செய்யும் ஆற்றல் (பாவனாசக்தி) வந்து விடுகின்றது. அப்பொழுது

அவர்கட்கு என்ன தெரியும் எனச் சிலர் எண்ணுகின்றனர். அவ்வாறு எண்ணுவது தவறு. நாம் எதைச்செய்தோமோ அவ்வாறே அவர்களும் செய்ய விழைகின்றனர். ஆதலின் அக்காலத்தை நாம் மிகக் குறிக்கொண்டு பார்த்தல் வேண்டும். நாம் மன அமைதியின்றி ஓர் வேலைக்காரனையோ அல்லது வேறு குழந்தைகளையோ கோபத்தோடு வைது கைச்சைகை ஏதும் காட்டுவோம் ஆனால் நம் குழந்தைகளும் அதைப் பார்த்து அக்கண்டபடியே செய்கின்றனர்.

இனி நாம் திருநீறு அணிதல் கடவுள் வழிபாடியற்றி உருவேற்றல் முதலிய ஒன்றைச் செய்வோமானால் அவர்களும் அவ்வாறே செய்கின்றனர். ஆகவே அவர்கள் தீப்பழக்கத்தையும் நற்பழக்கத்தையும் ஒன்றாகக் கையாளுகின்றார்கள் என்று நாம் அறிகின்றோம். இதனால் தீப்பழக்கம் ஏறாதபடி நன்கு பார்த்து வருதல் நம் கடமையன்றோ? அறிவுள்ள பெற்றோர்கள் தீயன விலக்கி நல்லன கைக்கொண்டு ஒழுகிவருதலோடு அதைக் கண்டு தங்கள் குழந்தைகளும் பின்பற்றி வருதற்கு ஏற்றவாறு தங்கள் நடைகளை ஒழுங்குபெற நடாத்திக்கொள்ளவேண்டும். குழந்தைகள் தங்கள் நல்நடைகளைக் கண்டு அவ்வாறு செய்ய முந்தும் பொழுதெல்லாம் அவர்கட்கு ஊக்கத்தையும் மகிழ்ச்சியையும் உண்டுபண்ணி;நற்செய்திகளில் அவர்கள் மன எழுச்சி பெறுமாறு தூண்டல் வேண்டும். எடுத்துக்காட்டாக இங்கொன்றைக் குறிப்பிடுவோம். இரப்போன் ஒருவன் வாயிலில் வந்து உணவாயினும் உணவுக்கு வேண்டும் பொருளாயினும் கேட்டு இரந்து நிற்குங்காலை, 'சமயல் ஆகவில்லை கைவேலையாய் இருக்கின்றேன்' என்று சோம்பலால் சொல்லி வந்தவனைப் போ என்று சொல்லும் பொழுது அருகிருந்து கேட்டுக்கொண்டிருந்த குழந்தைகள் இரப்போன்வந்து கேட்கும்பொழுதெல்லாம் தாங்கள் கற்றிருந்த பாடத்தை ஒப்பித்துவிடுகின்றனர். இவ்வாறே பலமுறை சொல்லிச் சொல்லி அவர்கள் மனம் தடிப்பேறினவுடனே ஈதற்குணம் அவர்கள் நெஞ்சினின்றும் வேறாக எடுத்து விட்டது போல் ஆகின்றது. ஆகவே நற்குணங்கள் பதிவதற்கு வழிகாட்டியாயிருக்கும் பெற்றோரின் செயல் தீயகுணங்கள் ஏறுவதற்கு

வழியாய் விடுகின்றது. அறியாப்பருவம் என்று நாம் எளிதாக எண்ணுவது பெருந்தீமைக்கு இடமாகிவிடும். அடிப்படையான காலம் தொட்டே ஒவ்வொரு செய்திகளிலும் மிகுந்தகவலையோடு இருத்தல்வேண்டும்.

மெய்கண்டானகம்.
உடன்குடி.
பு. முத்துசாமி பிள்ளை.

---

# அன்பு

உயிர்த் தொகுதியின்பாற்பட்ட நாமனைவரும் இன்பத்தையே நாடிச் செல்கின்றோம். அவ்வின்பம் உலக வின்பமும் வீட்டின்பமுமென இருவகைத்து. நாம் உடம் பெடுத்த நாள் தொட்டுத் துய்த்து வருவது முன்னையதேயாயினும் முடிவிற் றுய்ப்பது இறுதியதே. இவ்வீட்டின்பம் சிவபிரான்பா லுள்ளது. அவரது திருவுள்ளப் பாங்கு நமக்கெல்லாம் இறவாத தமது திருவடி யின்பத்தை யருளவேண்டு மென்பதே. ஆயினும் நாமனைவரும் அதனை ஒருசேர ஒரு காலத்துப் பெறுதல் முடியாத செய்தி. காரணம் நமக்கு அதனை யவ்வாறு எய்துந் தகுதி யின்மையே. எவனுக்கு எதைத் துய்க்கத் தகுதியில்லையோ அவனுக்கு அதைத் துய்க்கக் கொடுத்தல் வீண்டொழில். ஆதலின் சிவபிரான் நம்மைத் தமது திருவடி யின்பந் துய்த்தற் றகுதியுடையராக்குதல் அவருக்கு முதல் வேலை. தனுகரண புவன போகங்கள் அதற்கென்றே அவரால் நமக்குத் தரப்பட்டுள்ளன. உலகப்படைப்பின் நோக்கம் இதுவே.

நாம் அறிவு இச்சை செயல்களை யியல்பாக வுடையோம். நமது அறிவின் வழியே நமக்குப் பொருள்கள் எட்டும். அந்த எட்டப்பட்டவைகளின் மேல் நாம் நம் இச்சையைச் செலுத்துவோம். அந்த இச்சையின் வழி நம் செயல் செல்லும். எதையும் அறியாமலும், விழையாமலும், செய்யாமலும் இருத்தல்

நம்மால் முடியாது. மேற் சொல்லப்பட்டபடி நமது குறிக்கோள் இருப்பினும் நாம் யாதொரு புறத்துணையையும் அவாவாது தனித்து நின்று அதனைச் சாதித்துக்கொள்ளும் வலியில்லோம். முதன் முதல் உடம்பையின்றி நமக்கு ஒன்றும் ஆகாது. அதனையும் பெற்றோராலன்றி நாம் பெறுவதில்லை. இன்னும் உடன் பிறப்புக்கள், மனைவி மக்கள், சுற்றத்தார், தன்சாதியார், பிறசாதியார் முதலிய பலரும் நமக்கு இன்றியமையாது வேண்டப்படுபவர்களே. நமது புறவுதவி இம்மட்டில் நின்றபாடில்லை. மொழிவளம், நாட்டு வளம் முதலிய பலவளங்களும் நமக்கு ஊன்று கோல்களாகும். நம்மைத்தாங்கும் இத்தனையிலும் ஒன்று நமக்கு உதவிபுரிவதிற் பின்னிடின் நாம் அம்மட்டில் வலியிழப்போம். ஆகலின் வழிச்செல்வோராகிய நாம் ஒருவரையின்றி ஒருவர் அமையாதவராய் ஏனைய சடப்பொருள்களின் உதவியையும் வேண்டிய அளவு பெற்று நமது குறிக்கோளை நோக்கிச் செல்வோம். மேற்சொல்லப் பட்டவர்களும் சொல்லப்பட்டவைகளும் நமக்குத் துணையாவது போன்று நாமும் அவர்களுக்கும், அவைகளுக்குந் துணையாவோம். நமது பாதந்திரமே யிப்படிப்பட்ட பரஸ்பரதுணையில் நம்மை வைத்திருக்கிறது. இத்தொடர்பை நாம் அறிவாலுணரவே நமது இச்சையென்னுஞ் சக்தி அத்தொடர்பு வழி அவ்விருதிணைகளின் நலத்தின்பாற் செல்லுகின்றது. அதன்வழி நாம் அவைகளுக்கு வேண்டுவனவற்றில் நம்மாலியலுமளவைச் செய்கின்றோம். இம்மூன்றிலும் நடுநின்ற இச்சை பிறபொருள் நலத்திலும், பிறபொருளையடைவதிலும் நல்வழிப்பட்டு மீதூர்ந்து செல்லுதலே அன்பு எனப்படும்.

உயிர்க்குணமாகிய அது தொழிலாகப் பரிணமித்தே பயன்படுதலுடைத்து. அங்ஙனம் பரிணமித்தல் தானும் ஒரு காரணத்தை யின்றியமையாது. அன்பு தொடர்பு பற்றியும், தொடர்பு பற்றாதும் நிகழ்வதாகலின் அவ்வேறுபாடு நோக்கி அது தொழிலாகப் பரிணமித்தலும் இருவேறு காரணங்களையவாய்நிற்கும். தொடர்பு பற்றிய அன்பு தொழிற்படுதல் நன்றி மறவா நல்லறிவுடைமையாலாம். இவ்வுலகத்தில் புறத்துணை

யின்றி யொருவனும் வாழ்தலியலாது என்னும் அரியசெய்தியை நாம் உணர உணர நாம் உலகத்தாரிடத்தில் அன்புகாட்டாமலிருத்தல் முடியாது. ஆகலின் அன்புவளர்ச்சிக்கு முதன் முதல் வேண்டப்படுவது நன்றிமறவா நல்லறிவே. உலகம் செய்துவரும் நன்றியை நாம் சிந்திக்கச் சிந்திக்க நாம் உலகத்திற்குத் தொண்டு பூணுவதிற் றட்டில்லை.

ஆயினும் எய்தப்படும் பயனைப்பொறுத்து எய்துவிக்குந் துணைகள் தாரதம்மியப்பட்டே யிருக்கும். அத்தார தம்மியத்துக்கேற்பவே நமது அன்பும் தாரதம்மியப்பட்டு அத்துணைகளின்பாற் செல்லும். எனவே அத்துணைகளின் வன்மைமென்மைகளில் வைத்து அவைகள் அடைவுபடுத்தப்படும். அவ்வடைவின் வழி அவைகளின்பால் நமது அன்பும் அதன் வழித்தாய தொண்டும் அடைவுபட்டு நிகழும். நாம் ஒரு எடுத்துக்காட்டின் மூலமாக இதனை விளக்குவாம். சாத்தன் தன் இன்னுயிர்க்காதலியாகிய மனைவியைக் கையிற் பிடித்துக்கொண்டும், தன் பெறலரும் ஒரே புதல்வனைத் தோளிலேற்றிக் கொண்டும், ஆயிரம் பொற்காசை மடியிற் கட்டிக்கொண்டும் ஓர் ஆற்றைக் கடக்கத் தொடங்கினன். அவன் ஆற்றிற் சிறிது தூரஞ் சென்றதும் ஆற்றுநீர் முன்னினும் சிறிது மிகுந்தது. தன்பாலுள்ள மூன்று சுமைகளில் யாதானும் ஒன்றை நழுவவிடுதல் அவனுக்கு அவசியமாயிற்று. அவன் அச்சமயத்திற் புல்லென மதித்த பொற்காசை மடியினின்றும் உதறிவிட்டு எஞ்சிய இருசுமைகளோடும் நடந்தான். இன்னுஞ் சிறிது தூரத்துக்கப்பால் வெள்ளம் அதிகரித்தது. அப்பொழுது அவன் பிறிதொருசுமையையுங் கழற்றவற்புறுத்தப்பட்டான். அவனுக்கு அடுத்துப் புல்லெனத் தோன்றியது அவனது புதல்வனே. இப்பிள்ளைபோனால் வேறொரு பிள்ளையைப் பெற்றுக்கொள்ளலாம் என்று கருதி அவன் தன் அருமந்த புதல்வனைத் தோளினின்றும் வெள்ளத்தில் தள்ளிவிட்டுப் போனான். அவன் அக்கரை சேரக்கொஞ்சதூரந்தானுள்ளது. சிவச் செயலால் வெள்ளங்கரை புரண்டு விட்டது. அவன் தன் மனைவியைக் கைப்பற்றியவாறே கரை சேருதல் அரிதாயிற்று. இருவர் சாவதினும் ஒருவர் பிழைத்தல் நலமென்று

அவனுக்குப்பட்டது. ஆகலின் இம் மனைவி போனால் வேறொரு மனைவியை மணந்து கொள்ளலாமென்ற கருத்துடன் அவன் தன் நன் மனைவியையும் வெள்ளத்திற் கிரையாகப் போகவிட்டுத் தான் மட்டும் நீந்தி அக்கரைசேர்ந்தான். இஃதொன்றே நமது மேற் கருத்தைச் சாலவிளக்க அமையும். அன்றியும் உயர்வென மதிக் கப்படு மவற்றின் நலத்தில் தாழ்வென மதிக்கப்படுமவை குறுக் கிடுமாயின் பிந்தியவை புறக்கணிக்கப்படுமென்பதும் இதனால் விளங்கும். பைங்கூழோடு முளைத்திருக்குங் களைகள் பிடுங்கி யெறியப்படுவது கண்கூடு.

இவ்வாறு பொருள்களை அடைவு படுத்தும் எவனும் அவை களைத் தன் அறிவின் அளவிற்குத் தக்கபடியே அவ்வாறு செய் வான். நாம் கொண்ட வரிசையில் தலைநிற்பது பொய்யாமொழி யார் "செம்பொருள்" என்றழைக்கும் எமது எல்லாம் வல்ல சிவபெருமானேயாவர்; அல்லது "சைவம் சிவத்தொடு சம் பந்தமென்றான் சைவம் வளர்க்கும் சம்பந்தமூர்த்தி" என்ற படி அவரோடு ஒட்டியுளதாகிய சைவசமயமேயாகும். நாமும் அவரும் என்றுமுதல் உளோமோ அன்றுமுதல் அவர் எம்மைத் தினைத்துணை நேரமாயினும் விட்டுப் பிரியாதவர். அன்றியும் அவர் எம்மை எடுத்துச் சுமப்பவர். அவர் எமக்குச் செய்து வரும் பேருதவியைப்போன்று நாம், எமது பெற்றோர் மனைவி மக்கள், உற்றார், சாதி, மொழி, நாடு முதலிய எவரும், எவை யும் இதுவரை எதனையும் செய்ததுமில்லை; செய்யப்போவது மில்லையென்பது எமது துணிவு "என்னினுமினியானொருவன் னுள—னென்னுளே யுயிர்ப்பாய்ப் புறம்போந்துபுக்--கென்னுளே நிற்கு மின்னம் பரீசனே" எனவும், "தாயினு நல்ல சங்கரன்" எனவும், "தந்தைதாய் தன்னுடன்றோன்றினர் புத்திரர்தார மென்னும் — பந்தம்" எனவும், "உற்றாரையான் வேண் டேன்" எனவும், "கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய் வீர்" எனவும், "பசுநூல் கற்கும் பிச்சர்", "கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்", எனவும், "ஊர்வேண்டேன்", "திருக் கோயிலில்லாத் திருவிலூரும்........அவையெல்லா மூரல்ல

அடவிகாடே'' எனவும் போந்த அருண்மொழிகளின் வாயிலாய் இத்துணிவு எமக்கு வருவதாயிற்று. இதுகொண்டு நாம் மேற் கண்ட பொருள்களிடம் அன்பற்றவர்களெனக் கருதப்படவு மாட்டோம். எமது சமய வளர்ச்சிக்கு அவைகளெல்லாம் ஒரு தலையான் இன்றியமையாது வேண்டப்படுங் கருவிகளென்னும் கருத்தைவைத்தே நாம் அவைகளது நலத்தில் முயலு வோம். அவைகளிலொன்று அவ்வளர்ச்சியில் தடைசெய்து நிற்கு மாயின் அது நமது அன்பிற்குத் தகுதியற்றதாக நம்மாற் கருதப்பட்டொழியும். எமது எச்செயலிலும் எமது சமய வளர்ச்சி பற்றிய நோக்கம் ஊடுருவியே நிற்கும். இதனைவிட்டு எல்லாப்பொருள்களையும் ஒத்த தகுதியில் வைத்து அவைகளி டம் ஒத்த அன்பைக் காட்டுதல் எம்மால் முடியாத தொன்றும். எவராலுமே அது முடியாது.

இனித் தொடர்பு பற்றாத அன்பின் தொழிற்பாடு பிறர் படுந் துன்பத்தை யுணர்தலாலாகும். இன்பத்தை யேற்றலும், துன்பத்தை யொதுக்கலும் நம்மியல்பு. நம்மைவிட்டுத் துன்பம் விலகியோடவிரும்பும் நாம் பிறர் அதனால் மொத்துண்ணுவதைக் காணுதல் அறிவுடைமையாகாது. அப்பிறரால் நமது முற் போக்கில் ஓர் உதவியும் இல்லாமலிருக்கலாம். ஆயினும் பிறர்படுந்துன்பத்தை யுணர்தல் என்பது நம்பாலிருப்பின் நமது முற்போக்கிற் கிடையூறு நேராதவண்ணம் நாம் நம் வலியால் அவர்களையுந் தாங்கிச் செல்லுவோம். அது நம் உதவியை வேண்டாத எத்தனையோ பேர் நம்மைத் தாங்கிச் செல்வது போலாகும்.

(தொடரும்)

கடையம் ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை,

# ஆண்டான் அடிமை.

ஞால மோங்குக நான்மறை நீடுக
சீல மன்னவன் செங்கோல் விளங்குக
கால மாமழை மன்னுக காதலாற்
சால வீச னடியார் தழைகவே!

ஆண்டான் அடிமை என்னுமித் தொடர், ஆண்டவன் எவனோ அவனே அடிமையும் என்ற பொருளில், வினையாலணைந்த பெயராய் ஈண்டு எழப்போகும் பொருட்கு மகுடமாய் விளங்குவது. ஒருகோ லோச்சி யுலகு புரக்கு மன்னவனுங் காவலனே என்னும் ஆன்றோர் கொள்கை இத்தலைப்பினை வலியுறுத்தும். ஆகவே, இப்பொன்போன்ற தலைப்பில், சில்வாழ் நாட் பல்பிணிச் சிற்றறிவினர்த மவலங்கூறிக் காலங்கொல்லாது, எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாய் விளங்குறாஉ மெம்மான் றன் செம்மாண்ட தனித் திருத்தொண்டுத் திற னித்தகைத் தெனலைத் தருவித் தெளியவே இங்கு நாம் துணிந்து கொண்டதென்க. தொண்டு—அடிமைத்தொழில்.

உலகினை உய்வித்தற்பொருட்டு ஆங்காங்கு அவ்வப்போழ்தத்தியற்றியருளிய ஆண்டான் தொண்டு பலதிறப்படுவதாம். இத் திவ்விய திருத்தொண்டினைப் பற்பல நூல்களும் பயின்று பயின்று பலவா விதந்தோதிப் போந்தன. எனினும், நாம் இங்கு மீண்டுங் கிளாடல் வேண்டற்பாலதோ வெனின், எத்துணை யருந்தினுங் கரும்பிரதங் கைப்பதில்லைபோலும் எம்மான்ற னுடல் வேண்டுந் தொறும் பயன்றருந்தேபோகு மென்ப தொருதலையே யாம். இது குறித்தே:

"தெவிட்டா துளத்தில் தித்திக்குந் தேனே" எனவும்,

"நற்கருப்பஞ் சாற்றினிலே, தேன்கலந்து பால்கலந்து
செழுங் கனித் தீஞ் சுவைகலந் தென், ஊன்கலந்து
உயிர் கலந்து உவட்டாம லினிப்பதுவே" எனவும் பலவாறு ஆன்றோர்கள் அநுபவித்துக் குறித்துள்ளார்கள். எனவே,

எழுத்திற் புன்மொழி காண்கினும் (ஈசன்) நன்மொழி எனக் கோடல் தாதையர் கடனும். ஆகலின், அவைக் கஞ்சே மென்ப துள்ளம்! நிற்ப, இனிப் பொருள் கருதுவாம்:

ஆண்டான்

## விறகுத் தலையன்

"முரன்றெழு கான முயன்றுவா தியைந்த
வடபுல விஞ்சையன் வைகிடத் தகன்கடைத்
தென்றிசைப் பாண னடிமை யானெனப்
போகா விறகுடன் றலைக்கடை பொருந்தி * *
சாதாரி, யுலகுயி ருள்ளமு மொன்றுபட் டொடுங்க
விசை விதி பாடி யிசைப் பகை துரந்த
கூடற் கிறையோன்" என்பது கல்லாடம் (௪௪)

அதாவது: வடபுலத் திருந்து போந்த இன்னிசைப் பாணனும் யாழ்வல்லானொருவன், மதுரையின்கண்ணே தனதுவென்றி விளங்கத் தெருக்கடோறுஞ் சீடர்களாற் கீத மெழுப்பி அந்நகரப் பாண்டியவரச னவைமுன்னருஞ் சென்று தனையொப்பாரில்லையெனத் தருக்கி, நாளைப் பெரும் கீதப் போர் நடத்துவாமென்றிருமாந் திருந்தோன் தங்கியிருந்த இல்லக் கடைப்புறத்துத் "தென்றிசைப் பாண னடிமை யான்" எனச் சென்று, அவனை வெல்லுமாறு விறகுத் தலையனுய், அவ்வாயிற் புறத்தே போகிச் சகல வுலகங்களும், அவ்வவ்வுலக வுயிர்ப்பொருள்களுந் தனது கீதவயப்பட்டு உள்ளமொன்றித் தன்வசமாக விசைநூன் முறை வழாஅது இசைபாடி அப்பகைவனைத் துரத்திப் புறங் கண்ட கூடற் கிறையவன் என்பது.

இத்திவ்விய வரலாறு * கூடற் புராணத்தே

"இசை வல்லா னெனும் பாணன் வடதேயத்தா
னெய்திட மாறன்பத்தி ரனைவா வென்றே
னசையில்லாய்! அவனொடு பாடுகவா தென்ன;
வந்து சொக் குண்டென் றிருப்பப் பாணர்வேந்தன்

அசைவில்லா வடிமை யென விறகுகூறி
யசையிருளிற் சாதாரி யிறைவன் பாடத்
திசைநில்லா தொளித்து விடிவதன்முன் போனான்
திறற்பாணன் கிளைஞரொடும் வெருக்கொண் டாங்கு"
(இலீலா சங்கிரகம்—ருச)

என்த் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. இச்சரித விரிவை வகுத்துக் கூறுவன; செல்விநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பியருளிய திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணமும், பரஞ்சோதி முனிவ ரருளிய திருவிளையாடற் புராணமுமாம். இவ்விரு நூல்களும் ஒருவனதாடலையே கூறுவனவாயினும், அவ்வவர்கள் கூறுந் திறனமைந்த பொருட் பேறுகள் ஒன்றற்கொன்று மேம்பட்டு விளங்குவன. எம்பெருமான் திருக்கூத்தினை மிகமிகத் தெள்ளத் தெளியப் புலப்படுத்திப் பரவசமாக்குவன வென்பதனை முறையே காண்பாம்.

வடபுலப் பாணன் அரயனைக் கண்டு தனது திறங்காட்டிப் பின்றை "முன்னை நெறிநூ லியலிசைகண் முழுது முணர்ந்த பெருமானே! என்னை யொழிய விசை வல்லா ரில்லை யுலகில்" (இவ்வாக்கிய நயம் உட்பொரு ளொன்று தருவ தோர்க) எனத் தறுக்கி யுரைக்கும் மாற்றங் கேட்ட வழுதி, உளம்பெருகநாணி அதனைக் காட்டாமல் நல்ல சொல்லி, அணி, ஆடை, ஊணின்பயனுயினவெல்லாங் கொடுத்துப் "பாண! நாளும் வரவேணும்" என்று விடுத்துத் தன்னிசைப் பாணனும் பத்திரனை யழைப்பித்துக் கூட்டி, நிகழ்ந்தன கூறி, அவனுழைப் பாடியிசைவெல்ல "நீயும் நாளை வருக" வென்றனுப்பினன்.

இஃதிங்ஙனமாக, வைகிடஞ் சென்ற வடபுலப் பாணன் றனது வென்றிதோன்ற வித்தகப் பாடுவார்களை வீதிகள்தோறு மனுப்ப, அவர்கள் "சுந்தர வணி யணிந்து தொகுமுடிச் சுற்றுஞ் சுற்றிச் சிந்துரப் பொட்டு மிட்டுச் சிறந்தகுப் பாயமிட்டுச், சந்தனமிட்டு வீணை தண்டியாழ் கையின் வாங்கி, வந்த தந்திரி திருத்தி" எங்கும் மயங்கப் பாடினார்கள். இவர்கள் கீதத்தினைச் செவியுற்ற பத்திரன் மனங் கலங்கி நைவான்

"உற்றது நமக்குக் குன்றா வுயர்புடைக் காலைஎன்னால்
கற்றிசை வல்லே மல்லேங் காவலன் றிருமு னின்று
சற்றல வுரைத்தே மென்னும் முடியுமீ தெனத் தளர்ந்து"

மிஞ்ச நெஞ்சஞ்சி னேனாய்; "மெல்லிசை வல்லான்; எல்லார் நெஞ்சையுங் கடந்த செல்வன்; நேசர்கட் கென்று நேசன்; குஞ்சரந் தாங்குற் கோயிற் குழகன் இங்கிருப்ப, நாம் கொன்னேயஞ் சுவ தென்கொல்?" என்று தேறி யாலயம்புக் கிறைஞ்சுகின்றான்.

"வேண்டியாங் கடியார்க்கீயு மெய்ய! கருணை வாழ்வே! பாண்டிநன்னாட! அடிமை யிவ்வேழையேற்கா விரும்பி, இவ் வந்துள்ள பகையினைக் கழித்தல் வேண்டும்; நின்னலாற் புக லிலே!" என்னப் பெரிதும் வருந்திப் போற்றிச் சென்றவனன் பைத் திருவுளத் தடைத் திரங்கு மெம்மான் அச்சாமாணிய மனிதன் பத்திரனுக்கா—அவனன்புக்கா—த்திருவுரு வுருப் புனைகின்றானென்னுமிடங் கல்லையும் நீரா வுருக்குந் தன்மை யதெனின்மேற் கூறலென்னேயோ? (தொடரும்.)

சுகவனம்—சிவப்பிரகாசன்.

---

## இலக்கண விளக்க நூலுரையாசிரியர்.

நமது செல்வி பல்வகைப் பொருட்கும் இட மமைக்க வேண்டியிருப்பதாலும், இலக்கண விளக்க நூலுரையாசிரியரைப் பற்றிய ஆராய்ச்சிப் பொருள் பல இதுவரை வெளிவந் திருக்கின்றமையாலும் இது குறித்த மறுப்புக்கள் இனி செல்வியில் வெளியிடக்கூடாமையினை அன்பர்களுக்குத் தெரிவிக்கின்றோம்.

வ. சு

## ஓர் திருத்தம்

சென்ற புரட்டாசித் திங்கள் 'செல்வி'யின் ௩அ௰-ஆம் பக்கத்தில் 'மெய்ந்நெறி' என்றிருப்பதைச் 'சிறுமறை' என்றும், காப்புப் பாவை:

சிறு மறை யெழுதற்
கறுமுகன் றுணைவன்—எனவும் தயவுசெய்து திருத்திக்கொள்ள வேண்டுகிறேன்.

சுக—சிவ.

---

Pinted by Svakarmi Vilasam Press, Published by V. Subbiah
for The Sir I. S. S. W. P. Society, Madras.

திருச்சிற்றம்பலம்

# சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடுகள்

இவை, பிழையறப் பரிசோதிக்கப்பெற்று விலையுயர்ந்த கடிதத்தில் புதிய எழுத்துக்களில் செவ்விதாக அச்சிடப் பெற்றவை. கண் கவர் வனப்பு மிக்க நேர்த்தியான கட்டட முடையவை. தமிழ்நூற் கருவூலத்திற்குத்தக்க அணிகலன்களாகத் திகழ்வன.

## இலக்கணம்

### தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம்

திரு. கா. சுப்பிரமணியபிள்ளை, எம்.ஏ., எம்.எல்., அட்வகேட் அவர்கள் [தமிழினும், ஆங்கிலத்தினும்] எழுதிய ஆராய்ச்சிக்குரிய சிறந்த முகவுரையுடையது. உயர்ந்த கலிக்காகட்டடம். ரூ. 4 0

### தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம்

இது பாடபேதங்களும் திருத்தங்களும், மேற்கோள் குறிப்பு விளக்கமும் அடங்கியது. உயர்ந்த கலிக்கா கட்டட முடையது ரூ. 3 8

### நன்னூல் மூலம் (பாக்கட்) திருத்தமான பதிப்பு ரூ. 0 3

### ஐந்திலக்கணம் பகுதி-க

நன்னூல் (எழுத்தும், சொல்லும்), யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம் ஆகிய மூலங்களடங்கியது. உயர்ந்த திருத்தமான பதிப்பு. அழகிய கலிக்கா கட்டடம். ரூ. 0 12

## பதினெண் கீழ்க் கணக்கு

### திருக்குறள் மூலம் (பாக்கட், சாதாரணப் பதிப்பு)

ஆசிரியர் திருவள்ளுவரது வரலாறும், திருவுருவப்படமும் உடையது. கண்கவர் வனப்பு மிளிர்வது. ரூ. 0 8

### ௸ (பாக்கட், உயர்ந்த பதிப்பு)

விலையுயர்ந்த ஆன்டிக் கடிதத் (Antique Paper) தில் ரெக்சின் (Rexin) துணியில் பஞ்சுவைத்து உயர்ந்த ஆங்கிலப் பதிப்புக்களைப் போலக் கட்டடஞ் செய்யப்பட்டுள்ள கண்கவர் வனப்புமிக்க நேர்த்தியான பதிப்பு. ரூ. 1 8

**மதிப்புரை: திரு. பாப்ளி துரையவர்கள் எழுதியது.**

இக்கழகத்திலிருந்து வெளிவந்துள்ள திருக்குறள் இதன் சிறப்பிற்கேற்ப அழகிய பதிப்பினைப் பெற்றுள்ளதென்பது இதுவே முதன் முறையாகும். இவையிரண்டு பதிப்புக்களும் அழகியதாகவும், திருத்தமாகவும், தூய்மையான அச்செழுத்துக்களில், பதிக்கப் பெற்றுள்ளன. யாம் படித்த அளவில் அச்சுப் பிழைகள் ஒன்றும் காணப் பெறவில்லை.

**நாலடியார்**

அரும்பொருள் விளக்கவுரை அருஞ்சொல்லகராதியுடன் ரூ. 1 0

ஷை மாணவர்பதிப்பு ,, ரூ. 0 12

**களவழி நாற்பது** பதவுரை விளக்கவுரையுடன் ரூ. 0 5

***இனியவை நாற்பது**

பதவுரை, பழைய பொழிப்புரை விளக்கவுரையுடன் ரூ. 0 5

***திணைமொழி ஐம்பது**

பழையபொழிப்புரை, அருஞ்சொல்லகராதியுடன் ரூ. 0 5

**இன்னா நாற்பது** பதவுரை விளக்க உரையுடன் ரூ. 0 5

**கார் நாற்பது** உரையுடன் ரூ. 0 5

***சோமேசர் முதுமொழி வெண்பா மூலமும் உரையும்**

திருக்குறள் 133 அதிகாரங்களினின்றும் அதிகாரத்திற்கு ஒரு குறள் வீதம் 133 குறளடிகளை எடுத்துப் பின் இரண்டடியினும், அக்குறளின் பொருளை விளக்குதற் கேற்ற கதைகளை முன் இரண்டடியினும் அமைத்து வெண்பாவாக ஸ்ரீமத் சிவஞான சுவாமிகளால் பாடப்பெற்றது. ஆசிரியர் படத்துடன் காலிகோ கட்டடம். ரூ. 1 12

***திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி (உரையுடன்)**

அதிவீரராம பாண்டியர் பாடியருளியது. கலிக்காகட்டடம். ரூ. 1 4

**குமரகுருபரசுவாமிகள் பிரபந்தத்திரட்டு**

அரும்பொருள் விளக்கத்துடன். அழகிய பதிப்பு ரூ. 3 0

**மதுரைக்கலம்பகம்** அரும்பொருள் விளக்கவுரையுடன் ரூ. 0 6

**மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்** ,, ரூ. 0 6

**நீதிநெறி விளக்கம்** ,, ரூ. 0 4

ஷை மாணவர் பதிப்பு ,, ரூ. 0 4

**நளவெண்பா** அருஞ்சொற் பொருள் விளக்கவுரையுடன் ரூ. 1 0

*ஷை மாணவர் பதிப்பு ,, ரூ. 0 12

***அறிவுரைத் திரட்டு** (பண்டிட் தி.ப. சிவராமபிள்ளை)

நம்மக்கள் உடம்பு, உடம்பின் அருமை, அன்பும் அறிவும், உண்மை வாழ்வு, இறைவாது திருமேனி முதலிய 17 சிறந்த கட்டுரைகளடங்கியது. சிறந்த உரை நடைநூல். ரூ. 0 12

**சீவகாருணிய ஒழுக்கம்** (இராமலிங்க சுவாமிகள்)

சீவகாருணியம், உண்மைநெறி என்ற இரண்டு கட்டுரைகளுடையது சிறந்த உரை நடைநூல். ரூ. 0 4

**திருவாதவூரர் புராணம்** அருஞ்சொல்லகராதியுடன் ரூ. 0 8

---

*துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப் பெற்றவை.

## சைவ சித்தாந்த நூல்கள்

**சிவஞான சித்தியார் சுபக்கம் (இருவருரையுடன்)**
பொழிப்புரையும், ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் பதவுரையும் அடங்கியது
உயர்ந்த பதிப்பும், கட்டடமு முடையது. ரூ. 4 8

**சித்தாந்தப் பிரகாசிகை** (ஸ்ரீ சிவஞான சுவாமிகள்) ரூ. 0 3

**ஞானாமிர்தக் கட்டளை** (ஓர் அரிய பழைய நூல்) ரூ. 0 4

**பூப்பிள்ளை அட்டவணை** (ஸ்ரீமத் அம்பலவாணசுவாமிகள்) 0 2

**சைவ சித்தாந்த வரலாறு** (கா. சுப்பிரமணியபிள்ளை) ரூ. 0 3

**சைவசித்தாந்த விளக்கச் சுருக்கம்** ,, ரூ. 0 1

**சிவ தத்துவ விவேகம்** (சிவஞான சுவாமிகள்) உரையுடன் 0 5

**சுருதிசூக்திமாலையாகிய சதுர்வேததாற்பரிய சங்கிரகம்**
(சபாபதி நாவலர்) அரும்பொருள் விளக்கத்துடன் ரூ. 0 8

## திருவடிப் புகழ் நூல்கள

**திருவடிப்புகழ்மாலை** மலர்-க (பாராயணத்திற்குரியது) ரூ. 0 3
ஷை மலர்-உ ,, ரூ. 0 3
ஷை மலர்-ங ,, ரூ. 0 2

**திருமுருகாற்றுப்படை** (நக்கீரர் அருளியது) ரூ. 0 2

**கந்தரலங்காரம் கந்தரனுபூதி** (அருணகிரி நாதர்) ரூ. 0 3

**கந்தரந்தாதி** ,, ரூ. 0 2

**திருவகுப்பு** (25 வகுப்புகள்) ரூ. 0 5

**கந்தர் கலி வெண்பா** குறிப்புரையுடன் ரூ. 0 2

**திருத்தணிகை யாற்றுப்படை** (கச்சியப்பமுனிவர்) ரூ. 0 2

**கந்தர் சஷ்டி கவசம்** (தேவராய சுவாமிகள்) ரூ. 0 1

**திருச்செந்திற் கலம்பகம்**
இலக்கணக் கொத்து சுவாமிநாத தேசிகர் அருளியது. அருஞ் சொற்பொருளகராதியுடன் ரூ. 0 5

**திருவாசக மூலம் (பாக்கட், சாதாரண பதிப்பு)** ரூ. 1 2

**ஷை (உயர்ந்த பதிப்பு)**
விலையுயர்ந்த கடிதத்தில் ரெக்சின் (Rexin) துணியில் பஞ்சுவைத்துக் கண்ணைக்கவரும் வண்ணங் கட்டடஞ் செய்யப்பட்டது. ரூ. 3 0

**அகத்தியர் தேவாரத்திரட்டு**
திரு. கயப்பாக்கம் சதாசிவசெட்டியார் இயற்றிய உரையுடன் 1 12

திருப்புகழ்த் திரட்டு (அழகொழுகும் பதிப்பு) ரூ. 0 5

முருகன் புகழ்மாலை (பூசனைக் குரியது)

இதன்கண் முருகன் திருவுருவப்படமும், முருகன்வரலாறும், ஆசிரியர் வரலாறும் (திருமுருகாற்றுப்படை முதல் திருச்செந்திற் கலம்பகம் ஈறாக 9 அருட்பனுவல்களும், புராணங்கள் திருப்புகழ் பிள்ளைத்தமிழ் முதலியவற்றினின் றெடுத்த 117 தனிப்புகழ்ப்பாக்களும் அடங்கியன. இத்தகையபதிப்பு தமிழுலகிற்குப் புதிதாகும். விலையுயர்ந்தசெப்பமான கட்டட முடையது. 356 பக்கம் ரூ. 3 0

## தருக்கம்

ஸ்ரீ சிவஞான சுவாமிகள் பிரபந்தம்
முதற்பாகம் (7 வசன நூல்கள்) கலிக்கா கட்டடம் ரூ. 1 12

கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தரவிருத்தி 0 3

சிவசின்னங்க ளணிவதேன்? ரூ. 0 1

இந்து சமயங்களின் சுருக்கவரலாறு ரூ. 0 2½

மாதிருக்கும் பாதியன் ரூ. 0 1

சைவசமயவளர்ச்சி ரூ. 0 1

## அழகிய திருவுருவப் புகைப்படங்கள்

ஸ்ரீ நடராசர், சத்தி மாணிக்கவாசகருடன்
முருகப் பெருமான்
திருவள்ளுவர்
ஸ்ரீ அருணந்தி சிவம்
ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள்
ஸ்ரீ சிவஞான சுவாமிகள்
ஸ்ரீ உமாபதிசிவம்
ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்
ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்
ஸ்ரீ சோம சுந்தர நாயகர்

**தனித்தனி**

| | |
|---|---|
| காபினட் Cabinet விலை | 0 12 |
| பெரியது (Full Plate) | 1 8 |
| மிகப்பெரிது (Above Full Plate) | 2 8 |

## செந்தமிழ்ச் செல்வி (முதற்றொகுதி)

அகத்தியர், இசை, இலக்கியம், கம்பசித்திரம், தேரையர், திருநான் மறைவிளக்கம், வேள்வி, வால்மீகரும் கம்பரும், முத்திநெறி, தமிழகம், தமிழ் முதலிய அரிய ஆராய்ச்சிக்குரிய கட்டுரைகளும் நான்கு திருவுருவப் படங்களும் அடங்கியது. கலிக்கா கட்டடம். 466 பக்கம். ரூ. 3 8

## இரண்டாவது தொகுதி

அகத்தியர், இலக்கண விளக்க உரையாளர்யார்? இன்பநிலை, எண் பெரும் சித்திகள், சைவசித்தாந்த வரலாறு, சம்பந்தர் தேவார இயற்கை லருணையழகு, தமிழ் ஞான சம்பந்தர், நூலாராய்ச்சி, பொய்கையார், குட்டிக் குறள், காழித் தேவாரச் சிறப்பு முதலியன. 550 பக்கம். ரூ. 3 8

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
லிங்கச்செட்டி தெருவு, 306, சென்னை.